சிரவைக் கௌமாரசபை வெளியீடு எண் 72

உ
குருவே துணை.

பத்திராசலம்

# இராமச்சந்திரன் பிள்ளைத்தமிழ்

(குறிப்புரையுடன்)


ஆசிரியர் :
சிரவணபுரம் கௌமாரமடாலயம்
அருட்டிரு. இராமானந்த சுவாமிகள் மாணாக்கர்
தவத்திரு. கந்தசாமி சுவாமிகள்





குறிப்புரை :
கோவை கவியரசு, வித்வான்
திரு. கு. நடேசக்கவுண்டர், P. O. L.



வெள்ளக்கிணறு மணியம் ரங்கையர் பேரனார்
திரு. D. முகுந்தராம் அவர்கள்
பொருளுதவியால் அவரது மகள் மகாலட்சுமியின் நினைவாக
வெளியிடப்பட்டது

உ

நாராயணாய நம.



சீதை — ராமர் — இலக்குமணர்

சிரவைக் கௌமாரசபை வெளியீடு எண் 72



உ

குருவே துணை,

பத்திராசலம்

# இராமச்சந்திரன் பிள்ளைத்தமிழ்

(குறிப்புரையுடன்)



ஆசிரியர் :

சிரவணபுரம் கௌமாரமடாலயம்

அருட்டிரு. இராமானந்த சுவாமிகள் மாணாக்கர்

தவத்திரு. கந்தசாமி சுவாமிகள்



குறிப்புரை :

கோவை, கவியரசு, வித்வான்

திரு. கு. நடேசக்கவுண்டர், P. O. L.

வெள்ளக்கிணறு மணியம் ரங்கையர் பேரனார்

திரு. D. முகுந்தராம் அவர்கள்

பொருளுதவியால் அவரது மகள் மகாலட்சுமியின் நினைவாக

வெளியிடப்பட்டது

குருவே துணை.

# பதிப்புப் பாயிரம்.

திருவாமாத்தூர் கௌமாரமடாலயம்.

## திரு. தி. செ. முருகதாச பிள்ளையவர்கள்

இயற்றியது.

### வெண்பாக்கள்.

திருவார்கொங் கிற்சீர் செறிசிரவை தங்கும்
குருராமா னந்தவருட் கோமான் — பெருவாய்மை
மிக்கதவக் கந்தசா மிக்குரிசில் எந்தமக்கோர்
தக்க தமிழ்ப்பொக்கி சம்.

மாலடியார் சீர்பத்த மான்மியமா விண்டான்முன்
சாலணியார் பத்ரா சலப்பதியில் — ஞாலமுயச்
சேருமிரா மச்சந் திரனணிபிள் ளைத்தமிழ்ப்பா
பாருறுமன் பர்க்கமுதொப் பாம்.

சற்குரவன் தண்டணிவேள் சார்குருந்த மாமலைச்சேய்
நற்றமிழ்ப்பே ரைப்பச்சை நாயகிசீர் — முற்றுதவ
நேச மலிசாந்த லிங்கமுனி சேய்தமிழ்நேர்
தாசரதி பிள்ளைத் தமிழ்.

வெள்ளக் கிணற்றூரில் மேவுரங்கை யன்சுதன்சேய்
விள்முகுந்த ராமென்னு மெய்யன்பன் — கொள்ளுரிமை
தோயு மிலக்குமியாந் தோகைச்சேய் தன்பிரிவை
ஏயவெளி யிட்டா னிதை.

முகுந்தரா மன்சீர் முயங்குபிள்ளை வண்பா
முகுந்தரா மன்றுன் முதிர்சீர் — மிகுந்த
இலக்குமிச்சேய் தன்னினைவா யிந்நூலைத் தந்தே
துலக்கமுற்றுன் கொள்க சுகம்.



ஸ்ரீமத்ஸ்ரீ இராமானந்த சுவாமிகள்.

உ

குருவே துணை.

# பதிப்புரை.

சிரவணபுரம் கௌமார மடாலயம் அதிபரும். அருட்டிரு. இராமானந்த சுவாமிகள் மாணுக்கரும், தவப்பெருந் தலைவரும், தமிழ்ப் பெரும்புலவருமாக விளங்கிய எனது குருநாதர் தவத்திரு **கந்தசாமி சுவாமிகளால்** இயற்றிய பத்திராசலம் இராமச்சந்திரன் பிள்ளைத்தமிழ் என்ற இந்நூல் கௌமார சபையின் 72-வது வெளியீடாக வெளிவருகின்றது.

இந்நூலை அச்சிட்டு வெளியிடுவதற்கு பொருளுதவி செய்தவா வெள்ளக்கிணறு மணியம் திரு. ரங்கையர் பேரனும், பொலாரம் டெக்கான் சிகிந்தராபாத் ரயில்வே பே மாஸ்டரும்ஆகிய திருவாளர் **D. முகுந்தராம் அவர்கள்** ஆவர்.

இவருடைய அருமை மகள் செல்வி **மகாலட்சுமி** என்ற அம்மையார் கடந்த 1-11-53 ஞாயிற்றுக்கிழமை அன்று காலஞ்சென்றதை முன்னிட்டு அம்மகளுடைய நினைவு வெளியீடாக இந்நூல் வெளிவருகின்றது. திருமாலடியவர்களும், தமிழன்பர்களும் படித்துப் பயன்பெறும் வண்ணம் உதவி செய்த திருவாளர் **D. முகுந்தராம்** அவர்களுக்கு பற்பல நலங்களும் சிறந்து விளங்குமாறு எனது ஞானசிரியருடைய திருவடிகளை வாழ்த்தி வணங்குகிறேன்.

இந்நூலுக்கு முன்னுரை எழுதியும் குறிப்புரை எழுதியும் உதவிய பெருமக்களுக்குக் கௌமார சபையின் சார்பான நன்றியறிதலைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

இன்னணம்,

அடியார்க்கடியன்,

**சுந்தரம்.**

கௌமாரமடாலயம்,
சிரவணபுரம்.

உ

குருவே துணை.

பேரூர். சாந்தலிங்க அடிகளார் தமிழ்க் கல்லூரித் தலைவர்
கோவைக்கிழார், சைவஞாயிறு, உயர்திரு,

# C. M. இராமச்சந்திரன் செட்டியார் அவர்கள்

எழுதிய

# முன்னுரை.

---

கனிவண்ணன் என்றொரு மன்னவன் சிந்தை கலங்கக்கச்சி
மணிவண்ணன் தன்திருக் கோயில்விட் டேகி வரச்செய்ததும்
பணிவண்ணச் செஞ்சடைச் சொக்கர்முன் போய்வரப் பண்ணியதும்
அணிவண்ணம் எட்டோடு தென்றல்வெற் பீந்த அருந்தமிழே.

(தமிழலங்காரம்)

பத்திராசலம் இராமச்சந்திரன் பிள்ளைத்தமிழ் என்பது ஆந்திர நாட்டில் சிறந்து விளங்கும் பத்திராசலம் என்ற இடத்தில் எழுந்தருளியிருக்கும் அருண்மிகு இராமச்சந்திர மூர்த்தியின் மீது பாடப்பெற்ற பிள்ளைத்தமிழ் என்ற ஒரு பிரபந்த வகைத் தமிழ் நூலாகும்.

இந்நூல் திருமாலின் அவதாரமான இராமபிரான் மீது பாடப்பட்டது.

பிள்ளைத்தமிழ் என்பது தமிழில் பாடப்பெறும் 96 வகைப் பிரபந்தங்களில் ஒன்று. வழிபடு கடவுளைக் குழந்தையாகப் பாவனை செய்து அந்த அந்தப் பருவத்திற்கு உரிய செயல்களை உருவகப்படுத்தி அழகாகப் பாடப்பெறுவது பிள்ளைத்தமிழ். பிறவாயாக்கைப் பெரியோனுகிய இறைவன் நீங்கலாக மற்றத் தெய்வங்கள், ஞானசிரியர், அரசர், புரவலர் முதலியவர்கள் மீது புலவன் அன்பு மேலீட்டால் பாடுவது. அது ஆண்பால், பெண்பால் இருவருக்கும் தக்க பருவங்களை அமைத்துக் கூறப்படும்.

பிள்ளைத்தமிழில் அமைந்த பருவச் செயல்களை முதலாவதாக நாலாயிரப்பிரபந்தத்தில் பெரியாழ்வார் கண்ணன் மீது பாடியருளினர். அதேவிதமாகச் சேக்கிழார் அடிகள் பெரிய புராணத்தில் திருஞானசம்பந்தப்பெருமான் மீது பாடினர். சோழப்பேரரசு மேம்பட்ட நாளில் குலோத்துங்கன் மீது ஒட்டக்கூத்தர் பாடினர். பிற்காலத்தில் அநேக பிள்ளைத்தமிழ்கள் தோன்றின.

பத்திராசலம் என்ற சிறந்த இடம் கோதாவரி ஆற்றின் வடபால் உள்ள ஒரு ஊராகும். அங்கே ஒரு சிறு குன்றின்மீது இராமபிரான் திருக்கோயில் கட்டப்பட்டுள்ளது. அங்கே சித்திரைத் திங்களில் ராமநவமியை அடுத்துப் பெருவிழா நடைபெறுகிறது. பல்லாயிரம் மக்கள் சென்று வழிபடுகின்றனர். அது ஆந்திர நாட்டைச் சேர்ந்த போதிலும் ஹைதராபாத் மாகாணத்திற்கும் ஆட்சி உண்டு. அத்தலத்தை அடைவதற்கு இரண்டு வழிகள் உள்ளன. ஒன்று கோதாவரி வட்டத்து இராசமகேந்திரத்திலிருந்து வடமேற்கே ஏறக்குறைய 100 மைல் ஆற்றில் படகிலே சென்று அடையலாம். ஆற்றில் நீர் நிறைந்த காலத்து இது எளிதான வழி. மற்ருெரு வழி புகை வண்டி மார்க்கமாகும். விஜயவாடைச் சந்திப்பிலிருந்து சிகந்தராபாத் இணைபாதை தோர்கைல் நிலையத்தில் இறங்கி சிங்கரேணி கிளையில் ஏறி கொத்தகூடம் நிலையில் இறங்கவேண்டும். அங்கிருந்து 20 மைல் வண்டியில் சென்ருல் கோதாவரியின் தென்கரையை அடையலாம். பரிசிலில் நதியைக் கடந்து பத்திராசலத்தை அடையலாம். இரண்டு சிறுகுன்றின் மத்தியில் பத்திராசலம் ஊர் உள்ளது.

பத்திராசலக் குன்றில் இன்னும் பல கோயில்களும், மடங்களும், வீடுகளும் உள்ளன. விழா நாட்களில் ஆந்திர நாட்டிலிருந்தும், ஹைதராபாத்திலிருந்தும் ஏராளமான மக்கள் வந்து சேவிக்கின்றனர். கணக்கற்ற காணிக்கைகளை அளிக்கின்றனர். பெருவிழாவில் திருமணவிழா மிகவும்

சிறப்பானது. இந்து முசுலீம் அலுவலாளர்கள் வந்து சேவிக்கின்றனர்.

இக்கோயில் சிறப்பு அதனைக் கட்டிய பெருமையில் நிற்கிறது. 17-ம் நூற்றுண்டில் வாழ்ந்த தானிசா என்ற முசுலீம் அரசனிடம் தாசில்தாரராக இருந்த ராமதாசர் என்ற பேரன்பர் அரசனுக்குக் செலுத்தவேண்டிய வரிப் பணத்தை எடுத்து இராமபிரானுக்குக் கோயில் கட்டி விட்டார். அதை அறிந்த அரசன் அவரைச் சிறையில் வைத்துத் துன்புறுத்தினன். துன்பம் பொறுமல் வழிபடு கடவுளாகிய இராமரைத் துதித்தார். ராமர் காவலாளி போல் அரசனிடம் சென்று செலவளித்த பொருள் முழுவதும் தந்து ராமதாசரை மீட்டருளினர். இராமதாசரின் பெருமையை உணர்ந்த மன்னன் இறைவனுக்கு அணிகலன்கள் அளித்துச் சிறப்புச் செய்தான். அதுமுதல் கோயில் சிறந்து விளங்கலாயிற்று. இராமதாசராலும், மன்னனுலும், பொதுமக்களாலும் அளிக்கப்பட்ட அணிகலன்கள் தனித்தனியே வைக்கப்பட்டுள்ளன. ஆந்திர நாட்டுத் தலங்களுள் இக்கோயில் மிகவும் தலைசிறந்ததாகும் இராமதாசருடைய வரலாறு பாடல்களாலும், நாடகங்களாலும் ஆந்திர நாடெங்கும் புகழ்பெற்று விளங்குகிறது. இந்நூலாசிரிய அடிகளார் தாம் இயற்றிய பத்தமான்மியம் என்ற மொழிபெயர்ப்பு நூலிலும் சிறப்பாக ராமதாசர் வரலாற்றைப் பாடியுள்ளார்.

இந்நூலை இயற்றிய அடிகளார் சிரவணபுரம். கௌமாரமடாலயத்தை நிறுவிய தவப்பெருந்தலைவர் அருட்டிரு, இராமானந்த அடிகளாரின் மாணக்கர் தவத்திரு. கந்தசாமி சுவாமிகள் ஆவர். இவருடைய நூற்கள் சொற்சுவை பொருட்சுவையுடன் படிப்பவர்களுடைய உள்ளத்தை ஈர்க்கும் தன்மையனவாக இருக்கும். இவர் இயற்றிய நூல்கள் பல. ஆறு பிள்ளைத்தமிழ்கள் பாடியுள்ளார். இவர் பலவகை பிரபந்தங்களும், தலபுராணங்களும் பாடி ஆங்காங்குச்சென்று அரங்கேற்றியுள்ளார்.

சமய பேதம் இன்றி அறுசமயக் கடவுளர்கள் மீதும் இவர் பாடல்கள் இயற்றியுள்ளார்.

இவர் கோவைக்கடுத்த சிரவணபுரத்தில் கொங்கு வேளாண்மரபில் தோன்றியவர். இளமைப் பருவத்திலே கௌமார மடாலயத்தை யடைந்து அருட்டிரு. இராமானந்த அடிகளாரிடம் ஆறெழுத்து அருமறை உபதேசம் பெற்றுச் செந்தமிழ்க் கவிபாடும் ஆற்றலுடன் விளங்கினர். இவரது ஆற்றல் கண்ட இராமானந்த அடிகளார் கல்லாடையும், மடாலயத் தலைமையும் அளித்தனர். இவர் மாசறக் கற்று, கற்றதனாலாய பயனாக இறைவனடி மறவாத தவ ஞானச் செல்வராக விளங்கினர்.

இந்நூலாசிரியருடைய செய்யுள் நலங்கள் இந்நூலில் பல பாடல்களிலும் செறிந்திருக்கின்றன. அதற்குக் குறிப்புரையுடன் உள்ளமையின் அன்பர்கள் படித்து இன்பம் அடைதற்பாலன இந்நூலாசிரிய அடிகளார் இற்றைக்கு 6 ஆண்டுகட்குமுன் கடந்த சர்வதாரி ஆண்டு கார்த்திகைத் திங்கள் 25-ம் நாள் (10-12-1948) அன்று இறைவன் இணையடி சேர்ந்தார். இவருடைய வரலாறு இவர் இயற்றிய பல நூல்களின் முகவுரைகளால் விரிந்து காணலாம். நமது ஆசிரியர் தவத்திரு. கந்தசாமி சுவாமிகள் இயற்றிய இந்நூலைப் படித்து அன்பர்கள் இன்புறும் வண்ணம் அச்சிட்டு வழங்கியவர்களுக்கு எல்லா நலமும் எய்தும் வண்ணம் எனது வழிபடுகடவுளை வாழ்த்தி வணங்குகின்றேன்.

**கோவை நிலையப்பதிப்பகம்,**
**திருச்சிரோடு, கோவை.**
***11—9—55.***

இன்னணம்,
**கோவைகிழார்.**

## பாராட்டுக் கவிகள்

பேரூர், தெற்கு நந்தவனம்,
தவத்திரு. சுந்தர சுவாமிகள்
இயற்றியன.

அள்ளல் சூழ்தரு புவிபுகழ் சிரவண புரத்தில்
உள்ளம் ஒத்தஅன் பிசைகந்த சாமியாம் புனிதன்
பிள்ளை யென்றுரா கவன்றனைப் பேசுபா டல்களில்
உள்ள விற்பனம் யான்சொலுந் தரத்ததன் றுயர்வே.

பத்தி மிக்கபண் பால்வரு பாடலின் உயர்வை
எத்தி றத்தவென் றுரைப்பது இயல்வுரு தென்கை
உத்த மத்தவர் கொள்கையால் யானுமஃ துணர்ந்தேன்
இத்தி றத்தநூல் பலவிவர் எளிதிசைத் தனரால்.

முகுந்த ராமகோ விந்தமா தவனென முன்னி
அகந் திருந்திய பத்தியால் அன்புடன் இசைப்பார்
சகந்த ருந்துயர் ஒன்றினும் தாக்குறு துடலை
இகந்த நாளினும் பரகதி யடைகுவ தியல்பே.

ஆத லாலிந்நூல் அச்சகத் தேற்றிடப் பொருளை
ஈதல் நன்றென அன்பினுல் அளித்தமெய் யன்பன்
மாத வத்தனம் முகுந்தராம் மாசற வாழ்ந்து
மாத வன்கழ லிணையடி வாழவாழ்த் திடுவாம்.

---

திருமுருக. கிருபானந்த வாரியார் அவர்கள்
ஆசிரியர் "திருப்புகழமிர்தம்" சென்னை.

*வெண்பா.*

பிள்ளைத் தமிழாற் பெரும்பத்தி ராசலம்வாழ்
வள்ளற்சீ ராமரை வாழ்த்தினுன் – தெள்ளுதமிழ்க்
கந்தசா மிப்புனித கௌமார மாமுனிவன்
இந்தவுல கேத்த இனிது.




ஸ்ரீமத்

கந்தசாமிசுவாமிகள்

சிரவணபுரம் கௌமாரமடாலயம்.

உ

குருவேதுணை.

பத்திராசலம்,

# இராமச்சந்திரன் பிள்ளைத்தமிழ்.

## காப்பு.

[1]ஆறுவகை யாயுணரின் வேறுவகை யின்றிய[2]வ
பேதமய மாயறிந்தோர்க்
[3]காறுவகை யன்புமிக் கூறும்வகை யின்புளத்
தமைகடைக் கண்ணுதவியே
கூறும்வகை முற்றுங்க டந்தவா னந்தநிலை
கூட்டிக் கவின்மானிடக்
கோலம்பொ ருந்திரா மானந்த நாதனடி
கொண்டுமிக வந்தனைசெய்வாம்.
ஏறும்வகை யின்றியுளி ரங்குமிட ருறு[4]சிட்ட
ரினமுற்று நலமுற்றவே
இராவணன்மு னேருடலி [5]ராவணஞ் சரமழைபெய்
இன்பக்க ருங்கொண்டலாய்
வீறுவகை யன்பர்க்க ளித்திடக் கோசலைதன்
மென்மணிவ யிற்றுதித்து
மெய்ப்பத்தி ராசலத் தமையிரா மன்பிள்ளை
விரிதமிழ்க் கினிதருளவே.

ஆறுவகை - சிவன், சத்தி, மால், முருகன், கணபதி, சூரியன் என்னும் வைதிக சமயத்தெய்வங்கள். 2. அபேதம்-வேறுபாடில்லாமை. 3. ஆறுவகை-ஆறுதல் பெறும்படி உள்ளம் அமைதியுறும மகிழ்வுமாம். 4. சிட்டர் இனத்தை அடைந்து அவர்களுக்கு நன்மை மிகும்படி. 5. இராவ(ண்)ணம் - அழியும்படி.

## காப்புப்பருவம்.

### திருமால்.

நச்சுகுத் திடுகூரெ [1]யிற்றிரட் டையதான
நாவாய்த்த வாய்த்தலந்தோய்
நாகவணை மேற்சூற்கொண் மேகமணை திறமென்ன
நன்[2]கறிது யிற்பொருந்தும்
அச்சுதக் கடவுளென நாமமுற் றுலகெலாம்
ஆயபெரு மாயனடிகள்
அகலாமல் அகமீதில் மிகநாடி ஏத்திமிக்
கன்பினிற் கும்பிடல்செய்வாம்
மெச்சுதன் மைப்பே ரறப்பயிர் [3]பேரற
வெதுப்பு[4]வெங் கோடைமறமார்
வீரங்கெ டக்கடிது தீ[5]ரம்பு மாரிபொழி
விரிகருணை யார்கருத்தோய்
பச்சுருவு காட்டியருள் நாட்டிடவெம் விழிவழிப்
பதிவிருந் தூட்டியென்றும்
பத்திரா சலமருவு பாலனைக் கனிவினொடு
பாலனம் செய்தருளவே. (க)

*நச்சு - விடம். எயிறு - பல்.*

*1. இரட்டை நாக்கை உடைய வாயையுடைய சேஷசயனம், 2. யோக நித்திரை. 3. பெயரற்று அழியும்படி. 4. கொடிய கோடையாகிய பாவத்தின் மிக்க வீரம் கெடும்படி. 5. அம்புமாரி - அம்பாகிய மழை, நீர் மழை.*

### பரமசிவன்.

தனத்தத்த தானன தான — தந்தனத் தாத்தன.

கதிர்க்கற்றை விசியசோமன் அலைப்பத்தி யார்நதி[1]தூர்வை
கடுப்பக் குலாவரவேறு - செஞ்சடைக்காட்டினர்
கணைப்புட்ப மேலிடுமாரன் உடற்[2]பற்ப மாயறுமாறு
கணத்தட்ட [3]பாலநிலாவு-மொய்ம்புடைத் தீர்க்கணர்

கடற்பத்தி நீடிய[4]பால லிடத்துய்த்த [5]பாசமுலாவு
கரத்துட்டன் மீதுறவீசு - கஞ்சநற்ருட்டுணே
களைச்சித்த மேன்மறவாது பதித்திட்ட ஞானவிநோதர்
கருத்திற்[6]சு-கோததிபாய - நின்றவைப்பாட்சியர்
துதித்தற்பி னீள்வழிபாடு செயற்கொப்ப [7]வூரன்முனேலே
துணைக்கைக்க ணேகொடுகாண —
விந்தையிற் காட்டினர்
துணர்ப்பொற்பு [8]-ஞானமெய்வா வி யிடத்துய்த்த பான்மணநீடு
சுவைப்பற்பல் -[8]பாடல்வினுவி -
டுஞ்செவித் தோட்டினர்
[9]-துணைப்பற்று நாமமெனவி ளருட்சித்தி நாவரசா-[9]ழி
தொடக்குற்ற வார்சிலேமேன்மி-தந்திடக்கூட்டினர்
[10]துளக்குற்ற மாயவிகார வினைத்துச்சில் வாழ்[10]வறுமாறு
துடைத்தெற்குள் வீடருள்பாதம்-
நெஞ்சமைத் தேத்தும்

விதிர்ப்புற்ற தேவர்கள் யாரும் அரக்கர்க்குள் வாடிடுதீமை
விலக்கிச்சு கோதயவாழ்வி —
லொன்றிடப் போற்றென
மிகப்பத்தி யோடவறை கூவு பதத்திற்[11]ப யோதரசோதி
விரிப்புற்ற மேனிகுலாவி —
[12]யஞ்சிறைத்தார்க்கியன்
மிசைப்பொற்பு லாவியதோகை களிப்பக் குலாமுகில்போல
விழிக்கொப்பில் ஆரமுதான —
இன்பமெய்க்காட்சி[11]செய்
விளக்கத்த யாவுட னேது மகத்தச்ச மேவலிரான
வினைக்கெய்ப்பில் வானரராதிர் —
என்றவர்ப் போக்கிடன்

மதித்துற்ற சேய்தரு மாறு தனைப்பற்று கோசலபூமன்
மனத்துட் குதூகலமேவ —
மங்களச்சீர்த்தகை
வசிட்டத்த போதன நேச அருட்கொற்ற வாரியன்ஞான
வளத்தொப்பி லாரிடிமாசி —
ருங்கனுற்ருற்றியல்
மகத்திற்கு லாவவி யூடு சிறப்புற்ற நால்வர்களாநல்
மகப்பெற்று நீமகிழ்கூர்வை —
என்கவுற்ருற்றலின்
வரச்சிற்ப மார்திரு மேனி யினிற்புக்கு மேதினிகூடு
மணிப்பத்தி ராசலராம —
சந்திரற்காக்கவே (உ)

*1. அறுகம்புல். 2. சாம்பல். 3. நெற்றியிற் பொருந்திய நெருப்புக் கண்ணர். 4. மார்க்கண்டன். 5. யமன் 6. இன்பக்கடல். 7. சுந்தரமூர்த்திகள். 8. திருஞானசம்பந்தப் பெருமானரது தேவாரம். 9. நற்றுணையாவது நமச்சிவாயவே எனப்பற்றிய அப்பர். 10. பிறப்பு. 11. மேகம் போன்ற நீலநிற ஒளி. 12. ஐம்புலன் அடக்கிய முனிவர்க்கு. மயிலுக்கு உவகைதரும் முகில்போலக் காட்சியளிக்கும்.*

## சீதேவி.

தனத்தத் தனனதந்த தானனத் தாத்தன

அளத்தற் கரிதாமிஞ்சு பேரலைப் பாட்டொலி
அணிப்பத் திகளாரின்ப சீதளப் பாற்கடல்
அகத்திற் கனிவாய்வந்து காமர்முற்றேற்றிய
அருட்சித் திரமாயண்ட கோடிகட் காத்தவிர்
வளத்தற் புதநீர்கொண்ட மோகனச் சூற்புயன்
மணிப்பொற் பிசைகோலங்கொள் [1]மாசுணச்சீர்க்கயன்
வரக்கௌத் துபமார்பின்கண் வாழ்வுடைப்பாக்கிய
மலர்ப்பொற் கிளியே உன்றன் வார்கழல் போற்றுவல்

துளக்கற்றியல் சீர்தங்கு [2]கேகயத்தாட்கிசை
சுமத்திரைக் கொடியோடொன்று கோசலைக்கேற்றவிர்
துலக்கப் படவேவந்த நால்வரைப் பார்க்கமெய்
சுவர்க்கத்திறை போலொன்றி லேனெனப்பார்த்திப

னுளத்திற் கரைதீரின்ப மேவிடக் காட்சிகொ
ளுருப் பெற்றமு தாமென்க மார்பினைப் போற்கவின்
உடைப் பத்திர வேதண்ட மார்[3]தளிப்பாற்பொலி
யுயர்ச்சிச் செய[4]கோதண்ட பாணியைக்,காக்கவே (ரு)

*1. பெரும்பாம்பு. 2. கைகேயி. 3. கோயில். 4. இராமன்.*

## பூதேவி.

தத்தன தானதான தானனத்தாத்தன.

எற்றலை[1]வேலையேழு நாலையொப் பாப்பொலி
[2]யிட்டிடை மீதுசேலை யாமெனச் சேர்த்துயி
ரெட்டற மோடுபாவ நீடிலப் பாற்புக
விட்டுயிர் நாதன் மீதிலாதரத் தேற்றமெய்

துற்றவ ரேதன்மீது சேர்தரக் கூட்டிடு
முத்தம நீர்மைதேர வாரிசத் தாட்டுணை
யொத்தகை மேல்விடாத பூசனைப் பாக்கிய
வொப்பறு பூமிதேவி தாள்களைப் போற்றுவல்

கொற்றவ னேகைநீடு மாசமர்த் தேற்றமொல்
கொட்புறும் வாசியானை யூர்திறற் போர்க்கலை
கொற்றமெய் ஞானதீர னுகுமக்காற்றவ
குப்பியல் கோலசீல கோசிகற்போற்றுபு

பற்றமை வேள்விசாடு தாடகைப் போர்த்தையல்
பட்டிட வாளியேவி நீள்சிலைக்கேற்றடி
பத்திர நாமமேரு பாலகற் காக்கிய
பச்சைகொள் மேனிராம சாமியைக் காக்கவே

*1. கடல்கள் ஏழினையும். 2. சிறிய இடுப்பு.*

**அம்பிகை.**

தனதன தத்த தானனத் தாத்தன.

[1]கடாமரு மற்பெய் காய்சினக் [2]கூற்றுறழ்
[3]கயானன ரக்க னீருரித் தோற்புனை
[4-]களாவைநேர் பொற்பு நீள்களச்சீர்ப்பி[4-]னர்
[5]கவானில் வாழ் மெய்த்த போபலப் பாக்கியம்

விடாகமா வற்பு தாகரப் பார்ப்பதி
விவாதர்கா ணற்ற ஞானவிற் பூத்தவிர்
விநோத நீடப்ப ராபரத் தேற்றருள்
விராவபா ரப்பொன் வார்கழற் போற்றுதும்

நி[6]டேதகா மத்தொல் பாவவற்றீத்தொழில்
நிடேதமா கச்செய் பாதம்வைத் தோச்சுபு
நிதானமே வொப்பில் சீதையைக்காட்சிசெய்
நியாயசா பத்தை மீதுறத்தூக்கி[7]வெந்

நிடாததோர் வெற்றி மேவிநற்றூர்த்தொடை
யிராதிவா னத்து வாள்களத் தேற்றிடு
மியாகமே யொத்த சீலமுற்றேற்றமெய்
திராமனீள் பத்திராசலற் காக்கவே (ரு)

*1. மதம். 2. யமன். 3. கயாசுரன். 4. களாப்பழம் போன்ற திருநீலகண்டர். 5. தொடை, 6. வியக்கற் குரியது. 7. முதுகு காட்டாத வெற்றி.*

**விநாயகர்.**

தத்த தானன தானனத் தாத்தன.

சித்த மீதுற நாடிமெய்ச் சீர்த்துதி
செப்பி நீளறு கார்மணப் பூத்திரள்
திப்பி யாகர மார்சுவைக் கூட்டிசை
[1]திற்றி யாதிகொள் [2-]பூசைமிக் காற்றுரு

மித்த தூயரு ளாவலிட் டீற்[2]-றிலோர்
மெய்ப்பு காவகை வார்கரத் தா ற்[3]-பரன்
வெற்பின் மீதெளி தாயுறத் தூக்கி[3]-வை
விக்கி னேசுரர் தாள்நினைத் தேத்துதும்

ஒத்த சீர்மிது லாபுரிப் பாற்றெரி
வுற்ற பேர்களி வேலைபுக் கார்த்திடு
மொப்பில் சீர்மண மார்திருக் காட்சிகொ
டுட்பி தாவள வாவுவப் பாய்த்திகழ்

பத்த மார்நகர் கூடுமக் காற்[4]படை
பற்றி ராமனல் கோர்தனுக் கோட்டுபு
பட்ச நீடுத போபலச் சீர்த்திகொள்
பத்தி ராசல [4]-ராமனைக் காக்கவே (சு)

*1. தின்பண்டங்கள். 2. பூசை செய்வோரின் உள்ளாவலை நிறைவேற்ற. 3. அவ்வையைக் கைலையேற்றியது நினைக்கற்பாலது. 4. பரசிராமனை வென்ற செய்தி கூறப்பட்டது.*

## முருகக்கடவுள்.

தத்தனுதன தானதந்தனத் தாத்தன,

[1]இத்தராதல மீதுறுந்தொழிற் கூட்டுமெ
யிற்சதாமன மாகுலம்படற் போக்குந
லிச்சையா[-1]ல்வள நீடுகுன்றமுற் ருட்டள
விற்படாதிடு ஞானவின்ப மிக்கூற்றருள்

வித்தனுயுறு [2]சூர்வெல்சிங்கன்விற் பூட்கையின்
மிக்கவானன் [2] மேவிடுங்கதைப் பூர்த்திகொள்
விட்டருமல மாயைவன் றெழிற்றீர்த்தருள்
வெற்றிவேலிசை மார்பன்வண்கழற் போற்றுவல்

சித்தமோகையின் மூழ்குதந்தையிப் பார்ச்சுமை
செப்பமார்மகன் மீதிடுஞ்செயற் கேற்கையில்
செற்றநீடிய [3]கேகயன்சுதைக் கூற்றியல்
சித்தியா[3]-கிட மாவனம்புகச் சீர்த்திகொள்

பத்தமாரிறை வானகம்பெறற் கேட்டிகல்
பட்ட[4]தாய்பகை வோன்வணங்கநற் ருட்டுணை
பற்று பாதுகை யீயுமின்பருட் டோற்றமொல்
பத்திராசல ராம சந்திரற் காக்கவே (எ)

*1. பிரவிருத்தி மார்க்கத்தில் உடலில் வாழுமனம் கவலையுறுதலை நீக்கும் இச்சையினாலே. 2. சூரன் சிங்கமுகன் தாரகன். 3. கைகேயி யமனையொத்த வன்னெஞ்சியாகவே. யமனை ஒத்த சித்தி என்ற நயம் காண்க, சித்தி - சித்தப் உடையவள் மாற்றாந்தாய். 4. தாயைப் பகையாகக் கருதிய பரதன்.*

## பிரமதேவன்.

தத்தனாதனத் தானான தானனத் தாத்தன.

உய்த்தவேழ்சுரத் தாமேன்மை [1]யாரணக் கூட்டநல்
குற்றவானனத் தாலாவி சேர்திறத் தாக்கைசெய்
துட்குலாமலத் தீர்வாகு மாறியற் ருற்றல்கொ
ளுச்சிதாகரக் கோமானெ னுவரச் சீர்ப்பினர்

சித்தமீதுவப் பானடி யேதொழத் தோட்டிசை
[2]செக்கர் வாரிசப் பூமீதில் வாழ்வுடைப் பாக்கிய
[3]சிட்டியார் முதற் ருதாவென் ஞானிபொற் ருட்டுணை
சித்திதோய்சிரப் பான்மேவ நாளும்வைத் தேத்துவல்

[4]சத்தசீகரத் தாழ்சேய சான-[4]விப் பாற்பொலி
தப்பின் மாகுகப் பேர்மேய [5]தோணியுய்ப் பாற்கமை
சற்குணாதரச் சீர்நீள்ச கோதரச் சீர்த்திவிள்
[6]சத்துவாகரக் கோனான சோதரற் பார்த்தவீர்

பத்தமாரகத் தாராள னேவனத் [7] தாட்டையோர்
பத்து நால்கழித் தேசேர்வ னேகெனச் சாற்றுபு
பற்று சீர்மிகுத் தோனோடு கானிடத் தாட்சிசெய்
பத்திராசலச் சீதாபி ராமனைக் காக்கவே (அ)

*1. வேதங்களின் கூட்டத்தை விளம்பிய முகங்களால் 2. செந்தாமரைமலர். 3. படைத்தற்றொழில் செய்யும் தந்தை. 4. ஒலியையுடைய கடலில் முழுகும் கங்கை. 5. குகன். 6. பரதன். 7. ஆண்டு.*

## கலைமகள்.

தானந்த தாத்தா தனனத் தனத்தன.

[1]பூதங்க ளாற்ரூ யுருவைப்ப டைத்தொரு
போதங்கொ டாக்கா தலனுட்[-1]க மெய்த்திற
போதங்கள் சேர்த்தா விகளுக் குதித்திடு
போரங்க மேற்ரேய் மருண்மிக் கியற்றிடு
பேதங்க டீர்த்தே கதிவைப் பெனத்திகழ்
பேரின்ப நாட்டு டமையச் செயற்புத
பீடொன்றும் வாக்கா ளுபயப் பதத்துணர்
பேணின்ப மீக்கூ ருளமுட் பதிக்குவல்
பாதங்கொள் சீர்ப்பா துகையுச் சியிற்கொடு
பாயின்ப வூற்ரு மருவிக் கணுற்றவிர்
[2]பாசங்க மேற்றே தவமிக் கழைத்திசை
[3]பாரம்பொ ருட்டோர் புகலப் பொறுத்தொரு
கோதண்டன் மாற்ரேர் பரதற் கிணைத்தொளிர்
கூடன்பர் வாழ்த்தா தரமிக் க[4]பத்திர
கோடொன்று மாக்கோ யிலினிற் சிறப்புறு
கோதண்ட தீட்சா குருவைப் புரக்கவே. (சு)

*1, ஐம்பூதங்களாயின உடம்பைக் கொடுத்து அறிவைக் கொடுக்காத பிர்மா நாணமுறும்படி. 2. அன்பைத் தலைமேற்கொண்டு. 3. மண்ணவரும் விண்ணவரும் புகழும்படி. 4. பத்திராசலத்திலுள்ள கோயிலினில்*

## முப்பத்து முக்கோடி தேவர்.

தத்தத் தனத்தான தானன.

மெய்ப்பத்தி யுட்கூடு சோதரன்
மிக்கக்க ளிப்போடு தான்முயல்
கைப்பத்தி நற்சாலை கூடுபு
கற்புச் சிறப்போவில் சானகி
கைப்பற்ற வுற்சாக மோடுறும்
கற்சித்தி ரக்கூட மேகிகர்
மொய்ப்பத்தி ரக்கோடர் காவலர்
முப்பத்து முக்கோடி தேவரே (எ)

---

## 2. செங்கீரைப் பருவம்.

[1]பரமெடுத்திடு மனத்[2]துர மெடுத்திடுதவப்
பண்பார் [3]கலைக்கோட்டவன்

பண்ணரு மகத்தினிற் [4]பண்ணவர்கள் மண்ணவர்கள்
பாழியங் தவமான்மிய

வரமெடுத் திடலென்ன வலமெடுத்துப்பரி
மளந்தங்கிடச் சுழித்து

வந்தபிரசாதம தருந்தணிக்கோசலை
மணித்திரு வயிற்றமைந்தே

சரமெடுத் திடுகைத்த சரதமன் னவனின்ப
சாகரத் தமிழும் வண்ணஞ்

சரிதரத் திருமேனி கொண்டறப் பயிரினஞ்
சார் மறத்துர மருந்திச்

சிரமெடுத் திடுசமர்த் திரமெடுத்திடுமிறைவ
செங்கீரை யாடியருளே

[5]சித்திரா கரபூம பத்திராசலராம
செங்கீரை யாடியருளே. (மக)

*1. பரம்பொருள். 2. வலிமை. 3. கலைக்கோட்டு முனிவர். 4. தேவர். 5. அழகுக்குறைவிடமான மன்னவ!*

[1]தருமேனி வந்தவம ராவதித் தேவரோடு
தசரதப் பேர்மன்னவன்

[2]-தவமிக்க முனிவருட னுவமிக்க வரும்வீட
ண-[2]ன்முதற் சற்சனர்கணீர்

[3]கருமேனி வந்தமண் டோதரியொ டணியிராக்
கதமாத ரார்வலந்தோய்

கண்கள்வரை புரைபுயக் கண்டுடிப் பக்கௌசல
லாதேவி வாணரமினூர்

பெருமேனி தோயிரா வணகும்ப கன்னன்முற்
பேசிராக்கதர் மெய்யிடம்
பெற்றகண் புயமிடம் பற்றித்துடித்தாடு
பெற்றியுற வற்புதந்தோய்
திருமேனி கொண்டவிறை யருண்மேனி
வந்திடச் செங்கீரையாடி யருளே
சித்திரா கரபூம பத்திரா சலராம
செங்கீரையாடி யருளே. (ிஉ)

*1. கற்பக மரங்கள் ஓங்கிய. . முனிவர்களுக்கு ஒப்பான வீபீஷணன். 3. பெண்களுக்கு வலக்கண்ணும் தோளும் துடித்தல் தீய நிமித்தம். ஆண்களுக்கு வலக் கண்ணும் தோளும் துடித்தல் நன்னிமித்தம்.*

[1]தூசலேத் திடுகொடிவிண் ணோர்தூச லேத்திடுந்
[2]தோற்றம்விண் [3]டோற்றமுற்றீர்
தோற்றுநீர் பட்டிடு [4]பழங்கண்முற் றகலத்
துடைக்கு மொருவன் கரைக்கண்
வீசலேச் சரயூந திப்புடைய யோத்தியாம்
வியனகர ளிக்குமன்னன்
மெய்ப்பட்ட வர்த்தனர்கள் மகுடவர்த் தனரெலாம்
வீழ்ந்துதாழ்ந் தேத்திராணி
கோசலேக் கொப்பின்மக வாகிஞ வீர்கடிது
கொண்டாடி [5]வண்டாடிடாக்
குளிர்கற்ப கத்துணர்ச் [6]சோனேபெய் தென்னுடன்
கூடியாடுதி ரெனுஞ்சீர்த்
தேசலே விரித்திடுமுன் வாசலேயுடைக்குமர
செங்கீரை யாடியருளே
சித்திரா கரபூம பத்திரா சலராம
செங்கீரை யாடியருளே. (கந)

*1. துணிக்கொடி. 2. காட்சி. 3. பிறப்பு. 4. துன்பம் 5. கற்பகப்பூ பொன் மயமாதலிஞலும் தேவர்குரியதாத லிஞலும் வண்டு மொய்க்காதென்ருர். 6. விடாமழை.*

நயமேறிடுஞ்சுவைச் சுதைதனினு மிக்கான
நலமேறி டும்பவளவாய்
நகை[1]யூறல் வாரிவரு மழலையந் தீஞ்சொல்செவி
நன்கருந்தித் தசரதன்
புயமேறி டக்கொண்டு மெய்தவத் தொண்ட[2]ரம்
புயநேருளம் பொருந்தும்
புண்டரிக தாள்களைக் கண்களி லணைத்துட்
புறத்தினுங் கண்டருட்சின்
மயமேறி யுயர்தவப் பயனேறி டப்புரியு
[3]மைப்படிவ நேர்தெரிந்து
மயிலான கோசலைதன் விழியின்ப மாய்க்கொங்கை
வழிகின்ற பாலருந்திச்
செயமேறி விளையாடு வியனீடு மபிராம
செங்கீரை யாடியருளே
சித்திரா கரபூம பத்திராசலராம
செங்கீரை யாடியருளே (கச)

*1. வாய்ச்சலம், சலவாய். 2. நெஞ்சத்தாமரை. 3. மேகம்போன்ற திருவுருவம்.*

இடத்தா ளினைப்புவி யமைத்தணி வலத்தா
ளெடுத்துவா னிடமேற்றுசீ
ரிசைக்காசி பன்துணைக் காதலிக ளாமென்
றிசைந்த திதி யதிதிமைந்தர்
படத்தா மியற்றும்விளை யாற்றுட்ட ராமெனப்
பட்டவரை மண்கிடத்திப்
பரவுசிட் டரை[1]வான் பதிப்பதி[2]யென்வாழ்விற்
பதிப்பன்மண் பாற்பொருந்து
சடத்தாற் றவழ்ந்திடுகை வானரக்கும்புடன்
சார்வனென் றிடல்கடுப்பத்
தருதுணைக் கையூன்றி மெய்யூன்று தரிசனந்
தந்தருளி விரிகருணையாற்

றிடத்தாளநெஞ்சம் படத்தா ளமைத்தவிறை
செங்கீரை யாடியருள
சித்திரா கரபூம பத்ரா சலராம
செங்கீரை யாடியருளே (கரு)

*1. இந்திரன் ஊர். 2. வைகுண்டம்.*

**வேறு**

உளக்கண் பொருந்து மலவிருளு முடற்கண்
பொருந்தும் புறவிருளும்
மொழிக்கு ஞானப் பேரொளிமிக்
கொன்றுகருணைத் தடங்கணுளான்
வளக்கண் ணியமிக் கிசைந்தபரி
மளசுந்த்ரமிக் கிசைகரிய
மணிமே னியைக்கா ணுறுந்தவங்கை
வலிது வந்த தெனநெய்பெய்
விளக்கங் கானந் தப்பெருக்கால்
மேலாந் தனது முடிதுளக்கி
வியக்குந் திறத்தாற் சாருப
மேவுந் தகைமை புகையுணர்ந்தும்
அளக்க ரருட்பத் திச்சுடரே
யாடி யருளாய் செங்கீரை
அணியார் பத்தி ராசலக்கோ
ஞடி யருளாய் செங்கீரை (கசு)

நெற்றிப் பட்டஞ் சுட்டியணி நிலவார் முகத்தின் மிசையாட
நீல விழியி லருளாட நிறமார் பச்சை மேனியொளி
சுற்றிப் பகலைக் கவர்ந்தாடத் தொந்தி யரைகா ணசைந்தாடத்
துணைத்தாட் சதங்கை கலித்தாடத் [1]துவர்வா யமைநித்
திலமாட

2656



வெற்றிக் கரக்கங் கணமாட வேத மிசையாம் பாதமிசை
மிக்க சதங்கை தண்டைகதிர் விரித்தா டடவிண்ணோர்துயரம்
அற்றிப் புவிப்பான் மலர்பொழிய ஆடியருளாய் செங்கீரை
அணியார் பத்தி ராசலக்கோ னாடி யருளாய் செங்கீரை (கஎ)

1. சிவந்த வாயிலுள்ள முத்துப்போன்ற பல்லொளி ஆட.

தானனதத்த தானனதத்த தானனதந்தான.

தோடமிகுத்த மாயவரக்கர் தூலவுடம் பூடு
சோகமிகக்கு பீரெனவுற்ற சோரியுடன்சாய
நாடமர்பிற்செய் வீரர்மிதிக்க நாசமடைந்தேம
னாடிசை மெய்க்க ணேறமுன்மெய்க்கண் [1]ஞாளியிவர்ந் தாட
வாடலில்கற்ப காடவியைக்கொள் வாசவனின்போடு
வாசனைமிக்க பூவணிமிக்க மாரிபொழிந்தாட
ஆடல்விறற்று ரோணம் வைகத்த னாடுகசெங்கீரை
யாதரபத்தி ராசலகத்த னாடுக செங்கீரை.

1. நாய்.

தத்தனாதனதான தத்தன தனதான தானுதந்தான.

கற்பகாடவிசூன்மி குத்துவானிடமேவு காரேயென்றேது.
கைப்புருதுளமோகைமுற்றிநீளறமேசெய் காலோரின்பூற
விற்பயோதரமான வற்புதாகரநீர்மை வீருகும் பாடல்
மிக்கவோதிடுபாவ லக்குணலர்களோகை மேன்மேலும் தோய
நற்பராபரஞ்ஞான சித்திமாதவர்கூட நாநாவென்றேது
நச்சராமதவாத பிச்சராம் வெறியாளர் நாவேநின்றேய
அற்பர்காணரிதாம கத்துவாகனிவோடு மாடாய் செங்கீரை
யத்தியார்முகின்மேய பத்திராசலராம ஆடாய் செங்கீரை (கஅ)

1. அத்தமம் - யானை.

தானத்ததானன தானதந்தன தந்தாதந்தான.

மாபத்தியாளரு ளாவல்கொண்டவிர் மஞ்சார்மஞ்சான
மாணிக்கமேனியின் மேலிசைந்திடும் வண்டார் தண்டார
ஆபத்துநாடொறு மேபுரிந்திட வஞ்சாநெஞ்சாள
ராகத்துளாவிகொள் வானடைந்திடு மம்பார் மொய்ம்பாள
சோபத்துண் மூழ்கிய சீதைகொண்டிடு துன்பாரின்பான
தோள்வெற்றி தேர்தநு நாணணிந்திடு துங்காமங்காத
தீபத்தை யேநிகர் ஞானசுந்தர செங்கோ செங்கீரை
சேர்பத்திராசல ராமசந்திர செங்கோசெங்கீரை (உ0)

---

## 3. தாலப் பருவம்.

கொடையுந் திய [1]வைந் தருநிழற்செங்
கோல்கொண் டரம்பை மடமாதர்
கோலம் பொருந்திக் களிக்குமின்பக்
கோலாகலவாழ் வறக் கறந்தோய்
[2] படையுந் துபுபோக் கிய [2]நிருதர்
பகைமுற் றொழித்துச் [3] சுவர்க்கவணிப்
பதியின் பதியாப் பதித்திடுமப்
பான்மை வினைச்சார் பநித்திய [3]மென்
றுடையுந் தேவேந் திரனென்னை
யுவந்து காப்பா யெனக்கோயி
லுற்று வணங்க வூர்ந்தமுகி
லுயர் [4]காப் பான்மேற் காப் [4]பாகி
யடையும் பத்தி ராசலந்தோ
யரசே தாலோ தாலேலோ
அணிச்சீ தாபி ராட்டிமகி
ழமுதே தாலோ தாலேலோ. (உக)

1. *கற்பகம் பாரிஜாதம் முதலிய ஐவகைத் தெய்வ மரங்கள்.* 2. *ஆயுதங்களைச் செலுத்திய அரக்கர். சுவர்க்கமாகிய அழகிய நகருக்கு அரசனாக நிறுவிய புண்ணியத்தின் இயல்பு நிலையற்றது.* 4. *சோலையின் மேல் காவலாகி.*

[1] பானல் விழிச்சிற் றிடைவேடப்
பாவை மார்க ளணியிசையும்
பரண்மே லுறுங்கான் மொழிகவரப்
படருங்கிளிகட் பார்த்திவைநம்
[2] மேனன் மணியார்ந் திடவடைந்த
வென்னக் கவணின் மீதுறவைத்
தெறிமா ணிக்க வினங்கணிறைந்
திருண்டு பகல்காண் பரிதாம்பைங்
[3] கானல் வழியா ரிருள்கவர்ந்து
[4] கன்மந் துலையொப் பெனப்புரிந்து
கதிச்சீர் பொருத்துந் திருவருண்மெய்க்
காட்சிச் சகுனங் கடுக்குமிசை
யான லறும்பத் திராசலத்தெம்
அரசே தாலோ தாலேலோ
அணிச்சீ தாபி ராட்டிமகிழ்
அமுதே தாலோ தாலேலோ. (உஉ)

1. குவளைபோலும் கண். 2. திணை. 3. சோலை. 4. இருவினை யொப்புப்போல இருளையும் வெயிலையும் சமமாக்கி. 4. நன்னிமித்தம்.

[1] கானந் தந்தோய் மலர்க்குலங்கள்
கஞலுந் தருக்கண் மிசைதாவும்
[2] கவிக ளொளிமிக் கமைதரளக்
கதிர்வீ சிடுகூன் முதுகமைந்த
[3] பானந் தங்கைக் கொடு [4] கவரிற்
பதிக்கச் சோலை யுட்புகுவார்
பகலோ னுச்சிக் கதிர்முழுதும் பருகிக்
குளிர்ச்சி பரப்பிமிசை

வானந் தந்தோய் நிலவுமணி
மருவுந் [5]தாரா கணமுமிவண்
வாய்ந்த செயலற் புதங்காணு
மகிமை பொலிநாட் காட்டென்றுள்
[6]ளானந் தந்தோய் பத்திரவெற் பரசே
தாலோ தாலேலோ
அணிச்சீ தாபி ராட்டிமகி ழமுதே
தாலோ தாலேலோ. (உரு)

*1. வாசனை மிக்க அழகிய பூக்களின் கூட்டம். 2. குரங்குகள். 3. பால் போன்ற வெண் சங்குகளை 4 கிளைகள். 5. நட்சத்திரக்கூட்டம். 6. இன்பமிக்க.*

[1]படிமீ தேறும் பிறப்பதனுற்
பற்று பயனிப் பருப்பதந்தோய்
[2]படிமீ தேற லெனத்துணிந்தப்
படியேபுரி [3]தொண் டடியரடிப்
பொடிமீ தேற முடிகொடுமுன்
போந்த வரைமே லோர்களெனப்
போற்ற வவர்பின் வரும்பேறு
பொருந்தி லேமென் றிடும்பத்திப்
பிடிமீ தேறு முன்னவர்கும்
பிட்டுப் பெயரப் பின்னவர்முன்
பெயர்ந்தா ரிறையைக் கண்டனர்நாம்
பெறுவே மிவர்தென் றிசைமேலோ
ரடிமீ தேறும் பத்திரவெற்
பரசே தாலோ தாலேலோ
அணிச்சீ தாபி ராட்டிமகி
ழமுதே தாலோ தாலேலோ. (உச)

*1. பூமி. 2. சோபானங்கள், மலைப்படிகள். 3. தொண்டுசெய்யும் அடியார்களது பாததூளிகள் தன்மேற் படும்படி தலைமேல்கொண்டு நின்ற மலை. 5. மலைமேல் ஏறி.*

இமைக்குந் தகையற் றிடும்விழியிந்
திரனு லமைந்த வோர்[1]களங்கம்
இணைத்தான் மிசைதோய்ந் [2]துதிர்பொடிபட்
டிமைக்கு முன்பண் டையிலமைந்த
சுமைக்[3]குந் தளந்தோ யகலிகைதன்
றூய தவத்திற் பெரிதாமெய்த்
தோற்றம் படைத்துப் பகவனிரு
துணைத்தா ளென்று முடியமைக்கில்
நமைக்கும் புடன்கும் பிட்டு[4]முடி
நண்ணுந் தொண்ட ரடிப்பொடிகள்
நாளும் படியும் பெருவாழ்வு
நம்பா லுறுமென் றெணிக்கோயி
லமைக்குந் தன்மைப் பத்திரவெற்
பரசே தாலோ தாலேலோ
அணிச்சி தாபி ராட்டிமகி
ழமுதே தாலோ தாலேலோ. (உரு)

1. இந்திரனுற் கற்பிழந்த குற்றம். 2. உதிரும்படியான பொடியாகி. 3. கூந்தல். 4. கூட்டத்தோடு வணங்கி.

வேறு

[1]விரிசித் தமைந்தகரு மாணிக்க மானகதிர்
மேனியைமுன் மெய்த்தவத்தால்
விழிகண் டுவந்துகதி வழிகண்ட கோசலையின்
மெய்யின்ப மேவியென்றும்
[2]பரிசித் தமைந்துவழி பாடுபுரி வாரெலாம்
பத்தராய்ப் பின்சித்தராய்ப்
பரமுத்தி மான்களென வரமுற்ற வென்சிரப்
பாற்சிறப் [3]பாய்ப்பொருந்திப்
புரிசித்தி யாடலென வரமேற்ற பான்மைப்
[4]பொறுப்புற்ற விப்பொருப்புப்
புகலிடை யினங்களல் லால்வன்மை தோயுளப்
புன்மையரு மேலிவர்ந்து

தரிசித் திடச்செய்பத் திரமென்று மேற்கொளிறை
தாலேல தாலேலவே
தசரதகு மார[5]விருள் வசரதவ பாரனே
தாலேல தாலேலவே.

1. விரிவான சித்திகள். 2. தொடப்பெற்று. 3. எனது தலையின்மேல் சிறப்பாக. 4. பாரம் (ஜவாபுதரித் தன்மை) பொருத்தமலே. 5. இருள் வசப்பட்ட நிசிசரர் களைக் கொன்ற பெருமையனே.

பொருப்பணிக் கோயில்சீ ரணமிக்க தாகியுறல்
போக்கியின் பாக்கியஞ்சார்
புதுப்பணி யியற்றத் துணிந்துறு [1]மிலேச்சவிறை
பொன்னு றிலக்கத்தின்மெய்த்
திருப்பணி விளக்கஞ்செய் திடுராம தாசர்தஞ்
சீர்த்தி [2]வான் பார்பிலத்தும்
தினகரத் தகையிலத் தினமித் தினத்தொடெத்
தினமுஞ் சிறப்புற்றிட
விருப்பணித் தாசனைச் சிறையில்வைத் திறைசெய்துயர்
மேவாம லாண்டுதிறையாம்
[3] வித்தமுற் றமையக் குவித்துமுத் திக்கணுற
வித்துபர வத்துவாகும்
தருப்பணிப் பத்திரா சலவால யக்கடவுள்
தாலேல தாலேலவே
தசரத குமாரவிருள் வசரதவ பாரனே
தாலேல தாலேலவே. (உஎ)

1. முகமதிய அரசனுடைய ஆறுலக்ஷம் பொன்னைக் கொண்டு திருப்பணி செய்த ஸ்ரீ இராமதாசர். 2. விண் மண் பாதலம் என்னும் மூன்றுலகத்திலும் சூரியனைப் போல அந்நாளிலும் இந்நாளிலும் எந்நாளிலும் விளங்க 3. பொன்.

தத்தன தனதான தத்தன தனதான தானதானன.

துப்புநேர் கனியூறன் மிக்கவாய் [2]வளிவீசு
தோய்வால் வாடாதோ
சொற்கொணன் மறையார்சி ரத்தின்மே லமைதாள்கள்
[3]தூசா காதோநீள்

மெய்ப்புயா [4]சலமாத வத்தினீ டிலர்பார்வை
மேலே தோய்நீரான்
வெப்பமார் கிலதேகொன் மைப்பரா வியன்மேனி
வேறு வோர்நாடா

வொப்புமா லுறிநீடு திட்டிமே லிடும்யான்மெ
யூறே தோய்வேனே
யுற்றரா கவனேயெ னச்சொல் [5]கோ சலையார்வ
மூறூர் பாலார்வாய்

தப்புரு வடியார்ம னத்துளே துயின்மாய
தாலோ தாலேலோ
சற்குண கரஞான பத்திரா சலராம
தாலோ தாலேலோ. (உஅ)

*1. பவளம். 2. காற்று. 3. புழுதி படியாதோ 4. பெரியதவம் இல்லாதவர்கள். 5. தன்மையால் கோசலையின் ஆர்வத்தாலூறுகின்ற பாலையுண்டவனே.*

தனத்தத்த தானன தான தந்தன தான தானன.

[1]உருப்பெற்ற வாருயிர் யாவுமங்கள மோவா தேபார்மேல்
உவப்புற்று வாழ்வினி லாவிநன்கிக மோடே வானூடா
மருப்பெற்ற பேரநு பூதிகொண்டிசை யான தேதோய்வா
ரமைப்பிற்கு லாவிட மாயையென்கைபொ யார்வேர்
[தீர்சீர்சார்

மருப்பெற்ற பேரரு ணீர்நிறைந்தவிர் மாணூர் கார்கோளாம்
வனப்புற்ற வான்மணி மேனிதங்கியல் வாழ்[1]வே
[சேண்மீதார்
[2] தருப்பெற்ற தேவர்க ணுடிடுஞ்சுக தாலோ தாலேலோ
தகைப்பத்தி ராசல ராமசந்திர தாலோ தாலேலோ. (உகூ)

*1. உயிர்கள் எல்லாம் இம்மை மறுமை யின்பங்களை நுகர்ந்து புகழ் குறையாமல் அநுபவிக்கத்தக்க பெருமை பெறும்படி மாயையாகிய வெப்பம் தீரும்படி கருணையாகிய நீரைச் சுமந்து விளங்கும் மேகமாகிய திருமேனி பெற்றவ்னே. 2. கற்பகம்.*

தனனத்தனனு தந்ததான தானனதானு தானுனு.

கருணைக்கடலே யென்றுலாவு காரணகாயா தாலேலோ
கனிவிற்பணிவா ரின்பமேவு பாடல்கொள்காதா தாலேலோ
[1]அருணத்தகையார் கஞ்சமானு நீள்விழியானே தாலேலோ
அயலற்றுளமே னம்பிநாடு மாதவராழ்வாய் தாலேலோ
[2]திருணத்தகையே னென்றனுவ லீகைசெய்தேவாதாலேலோ
திறமைக்[3] குகனீ டன்பிலோகை கூடியசீலா தாலேலோ
[4] தருணத்தவிர்கோ தண்டமோடு நேர்வருசாமீ தாலேலோ
தகுபத்திரவே தண்டமேவி ராகவதாலோ தாலேலோ (ங0)

*1. செங்நிறம். 2. துரும்பு. 3. குகப்பெருமாள், வேடராசன். 4. இளமை.*

ங-வது தாலப்பருவம் முற்றியது.

---

## 4-வது சப்பாணிப் பருவம்,

உரமுறப் புதல்வனுயர் சிரமுறக் கதிர்முடி
உவப்பிற் கவிப்ப னெனவே
உளமுற்ற தசரதனுள் வளமுற் றவாமுழுது
மொழிவித்து மொழிவித்திடும்
வரமுறத் தருதி [1]ரென வேகேட்ட கேகயனன்
மகளாக மகிழ்ச்சிமிகவே
[2] வந்தனையெ னக்கனிவில் வந்தனைசெ [2] யக்கணமன்
னவனுவலு மாற்றமென்னத்
திரமுறப் பரதனு டாளவாண் டீரேழு
செய்யவற் கலையுடுத்துச்
செழிய [3]கா னடைகொண்டு கானடைதி[3] யென்றவவ
டிலகவா னனமதிக்குத்
தரமுறக் கூப்பலர்க் கரமுறக் கூட்டிநற்
சப்பாணி கொட்டியருளே
[4] தாசலட் சியபத்தி ராசலத் திசையத்த
சப்பாணி கொட்டியருளே. (௩௧)

*1. ஆசை முழுவதையும் நீக்கி, முன்னே சொன்ன வரத்தை தாருங்கள் என்று. 2. வந்து தாயே என அன்போடு வணங்கிய அப்போது. 3. காலால் நடந்து காட்டினையடைதி. 4. அடியார்களின் குறிக்கோளாக உள்ளவனே.*

[1]தீபங்க ளிற்கொள்சீர்த் [2] தீபங்க ளென்றுறுந்
திரமுற்ற வரமுற்றிடும்
சேவகத் தனியாண்மை மேவகத் தடனிடு
[2] திசையரசர் வசையரசராய்
[3] மாபங்க முற்றுளச் சோபங் கலந்திடு[4] பொன்
மலையனைய சிலைய [4]தனையோர்
[5] வலமேவி டக்கரத் தலமே லமைத்திலகும்
வன்மையார் நாரிபூட்டித்

தூபங்கு லாவுமணி மாடமிசை புருவமாந்
தூயவிற் கோட்டி யிமையாச்
சுந்தரக் கண்ணம்பு பெய்குவா ளின்பந்
துணைக்கூட வேவளைத்துச்
[6] சாபங்கொ டுத்தலிற் சாபந்து ணித்தகைச்
சப்பாணி கொட்டியருளே
தாசலட் சியபத்தி ராசலத் திசையத்த
சப்பாணி கொட்டியருளே. (௩௨)

சானகியின் மேல்வைத்த காதல் தந்த ஊக்கத்தால் சிவதனுவை இராமர் ஒடித்தார் என்று ஆசிரியர் கற்பனை செய்துள்ளார். மாடமிசை சீதை நின்ற நிலை இராமரது மனத்தைவிட்டகலாமை குறிக்கப்பட்டது.

1. தீவுகளில். 2. விளக்கு. 3. திக்குகளில் வாழும் அரசர்கள் பழியுற்றுப் பலமற்றவராக. (வசை + அ + ரசர் எனப்பிரிக்க) 3. பெரிய அவமதிப்பு அடைந்து, 4. சிவதனுசை. 5. வெற்றி பொருந்திய இடதுகை. 6. உற்சாகம் கொடுத்ததனாலே. 6. வில்லை ஒடித்த.

[1]காரணி மணிக்கதி ருலாவியம் போதிகைர்
காட்சிபெற் றுப்பொலிதூண்க்
கண்ணுல மென்றுபின் பமுதமய மாந்தி[1]ருக்
கல்யாண ராமவென்ன
வாரணி பொருங்கொங்கை யின்பங் குலாமுத்த
மாலையா னந்தவிழிநீர்
[2] மஞ்சனங் கொண்டவிரு [3] மஞ்சனநன் மேனிகொளுன்
மாலையிட் டருளென்றிடத்
தேரணிகொள் மன்னவர்கள் மாதவப் பெருமுனிவர்
தேவர்கண மின்பமேவிச்
செயராம சந்திரபல் லாண்டுவாழ்ந் தருளெனச்
சீதாபி ராட்டிமகிழத்

[4] தாரணிதொ முக் [5] களத் தாரணி கரத்தினிற்
சப்பாணி கொட்டியருளே
தாசலட் சியபத்தி ராசலத் திசையத்த
சப்பாணி கொட்டியருளே. (நடு)

*சீதைக்கு மணமாலை சூட்டிய கரத்தாற் சப்பாணி கொட்டும்படி வேண்டப்படுகின்றது.*

*1 கரிய அழகிய கண்மணியின் (கருவிழியின்) பரவிக் கடல்போன்ற தோற்றம் படைத்து விளங்கும் இரண்டு கண்களும், முதலில் விடம்போன்றும் பின்பு அமுதமும் போன்றும் உனக்கு ஆவதற்கு ஏதுவான சீதை; 2. அபிடேகம் ஆடி. 3. மேகம்போன்ற திருமேனியையுடைய 4. மண்ணுலகம். 5. மாங்கல்ய சூத்திரம்.*

[1] கமர்த்தலை விடுத்தவமு திற்கொடிய தென்ன [1] வன்
கார்த்தவீ ரியநாமமார்
காவலன் புரியு [2] மக் கிரமமாற் ருமலிரு
கண்சிவப் பூறிநெஞ்சத்
[3] தமர்த்தலறு வீரத்தி லரசரினு மந்தணர்க
ளாவார்கண் மேலென்றிட
[4] வமரரும் [5] பரசவென் கைப்பரசில் வேர்களைந்
தவிர் [6] சமந் தப்பஞ்சகத்
தெமர்க்குத் தருப்பணஞ் செய்திடுவ னென்றவித
மிசைராமன் முற்குறுகுகா
லின்புலவும் வானகத் தின்புடைசெல் கின்றதவ
வேற்றமதை வாளிவலியாற்
[7] சமர்த்துக் கவர்ந்தருள் [8] சமர்த்துடைக் கைகளிலோர்
சப்பாணி கொட்டியருளே
தாசலட் சியபத்தி ராசலத் திசையத்த
சப்பாணி கொட்டியருளே. (நச)

*பரசிராமனை வென்ற செயல் விவரிக்கப்படுகின்றது.*

*1. நிலப்பிளப்பில் வார்த்த அமுதம்போல. 2. ஒழுக்கினம். 3. போர்செயல். 4. தேவரும். 5. புகழ. 6. ஒருதல விசேடம். 7. எதிர்த்து. 8. சாமர்த்தியம்.*

பொய்த்[1]துவக் குறுதமோ குணமுற்ற கருவியிற்
புணர்வலியு மசைராசதம்
போக்குற்ற தானபுன் புலவலியு மற்றுற்ற
புண்ணியத் தவர்கண்மருவும்
சத்துவக் குணமேசி ரந்தூக்கி நன்றரிய
தவமே புரிந்துனணியார்
சச்சிதா னந்தபரி பூரணுகர ஞான
[2] சகுணப்பி ரமமாகிநீள்
வத்துவிற் கூடியமை சகசநிட் டைப்பெரிய
வாழ்விற் கலந்துவக்கும்
மாண்புகரு தெனையுலகில் வீண்புரிய வைத்தவிதி
[3]வல்லேபக் கென்றழிதரத்
தத்துவப் பிணியற நகைத்தணிக் கைகொடொரு
சப்பாணி கொட்டியருளே
தாசலட் சியபத்தி ராசலத் திசையத்த
சப்பாணி கொட்டியருளே. (௩௫)

*1. உடம்பு. 2. அவதாரத்திருமேனி. 3. விரைவில்.*

**வேறு**

தொனித்த புகழ்க்கௌ சிகமுனிபின்
றேய்ந்து [1] சிலேயின் மீதமையத்
துணைத்தாள் கொட்டுந் துகளதனுற்
றேய்ந்த சாப மறக்கொட்டி
இனித்த வணிகொட் டியவடிவேற்
றிருகண் கொட்டு [2] யின்பவற
லிறைக்கும் விழிகொட் டிலதமைய
வேத்து மகலி கைக்கருளித்
தனித்த மகத்தி லாகுதிகள்
தவத்தோர் கொட்டத் தாடகைதன்
தனையன் சுபாகு வுடலி[3]னெய்த்தோர்
தரையிற் கொட்டச் சமர்த்துடனே

குனித்த சிலைக்கைத் துணைமலராற்
கொட்டி யருளாய் சப்பாணி
கோலப் பத்தி ராசலக்கோன்
கொட்டி யருளாய் சப்பாணி. (௫௬)

*1. அகலிகையான கல். 2. இன்பக்கண்ணீர் 3. இரத்தம்.*

தருவா ரமரா விதியமரர்
சயரா கவபல் லாண்டென்னச்
சந்தோ டத்தாற் றந்துணைக்கைத்
தலங்கள் கொட்டி யைந்தருவின்
மருவா ரலர்கொட் டிடவரம்பை
மாதர் கொம்மி கொட்டியுள
மகிழ்ந்து நின்சீர் கொண்டாட
வரம்பில் [1]பல்லியங்கள் கொட்டிப்
[2]பொருவான் [2]புகுமி ராவணன்மேற்
பொங்கிக் குருதி மிகக்கொட்டப்
புந்தி சலனப் பறைகொட்டப்
போர்செய் கோதண் டத்தீட்சா
குருவா மிராம சந்திரனே
கொட்டி யருளாய் சப்பாணி
கோலப் பத்தி ராசலக்கோன்
கொட்டி யருளாய் சப்பாணி. (௫௭)

*1. பலவகை வாத்தியங்கள். 2. போர் செய்யவரும்.*

தத்தன தனதான தத்தன தனதான தத்தா தனத்ததனன.

[1] கற்பகா டவிமீதி னிற்குலா வியதேவர்
கட்டோய்து யர்ச்சலதியார்
கற்றைசேர் வடவான லத்தைநேர் [1]எனநீடு
கட்டார ரக்கரெனவாழ்

சற்பமா கினர்காதி னுட்பகீ ரெனவாவி
தத்தாடி டத்தவமுளார்
தத்தமா தகமேலி சைக்குமோர் பரநாத
சத்தாக ரப்பொலிவினுர்
பொற்பரு தியல் [2]கோச லத்தரா [2] திபனேகை
புக்காத ரத்திளகவே
புத்தியா ரிளேயோர்க ளிப்பினு லுடனேபு
டைத்தேப யிற்சிபெறவே
தற்பரா வருணீடு சிற்பரா வபிராம
சப்பாணி கொட்டியருளே
தட்டில்சீர் மிகமேவு பத்திரா சலராம
சப்பாணி கொட்டியருளே. (ருஅ)

*1. தேவரது துயரமாகிய கடலேப்பருகும் வடவாக்கினியின் சடுலஒலிபோல. 2. தசரதன்.*

தானனத் தத்த தானனத் தத்த தத்தா தத்தான.

[1] வீசலேப் [1] பத்தி யார்கடற் புக்கு
மிக்கா [2] மப்பாரு
மேகமொத் துற்ற பாசொளிக் [2] கற்றை
[3] மெய்க்கா மர்ச்சோம
நேசமெய்த் தட்ப மார்முகத் திற்ப
னிக்கே யொப்பாகு
நீர்வெயர்க் குப்பல் கூர்வியப் [4] பிற்கு
னிப்பா யிப்பாரின்
வாசனேப் பற்று ருது[5] பத் தர்க்குள்
வைப்பா நற்ருள்கள்
மாறிவைத் தொப்பில் வீரியப் பொற்பு
வற்ரு துற்றேகொள்

கோசலைக் குட்கு தூகலப் புத்ர
கொட்டாய் சப்பாணி
கோலமெய்ப் பத்தி ராசலக் கத்த
கொட்டாய் சப்பாணி. (நு௯)

*1. வீசுகின்ற அலைவரிசை. 2. நீரையுண்ட மேக மொத்த பச்சை நிறத்தின் கதிர், 3. இராமசந்திர. 4. ஆடுவாய். 5. அன்பர் உள்ளத்தேவைத்த புதையல் போன்ற பாதங்கள்.*

தனதத்த தானன தானதந்தன தத்தான தத்தனா.

வளமிக்க தாபதர் யாரும் வந்துளம்
வற்று மகிழ்ச்சியராய்
மறையுச்சி மீதவிர் மோலியென்றநின்
மட்டார்ம லர்ப்பதமே
[1] துளவத்தை யாவையு மேய கன்றுறு
சுட்டான தற்றுயவே
[2] துளவத்த மாலம தால ணிந்துறு
தொத்தாக வுற்றனர்நீள்
புளகத்தி னேடம ரேச னும்பர்கள்
பொற்பான பொற்கொடிநேர்
புனிதப்பு லோமசை மாதுமொன்றினர்
புத்தோகை மிக்குறவே
[3] தளமுற்ற தாமரை நேர்கை கொண்டொரு
சப்பாணி கொட்டுகவே
தகுபத்தி ராசல ராம சந்திர
சப்பாணி கொட்டுகவே. (௬0)

*1. துள்ளுகின்ற அவத்தை எல்லாம் நீங்கி. 2. துளவம் தமாலம் என்பவற்றால் அலங்கரித்து. 3. இதழ்*

௪—வது சப்பாணிப் பருவம் முற்றிற்று.

---

## 5. முத்தப் பருவம்.

[1] உருகு மலர்ந்த சிந்தனையி
னுள்ளே யிடையீ டற்றுலவு
மொருமை யருமைச் [2] சுதற்காணு
வொவ்வோர் கணமுங் கற்பமெனப்

பெருகு மலர்ந்த பெருங்காதற்
பெயராத் துன்ப நீர்காணப்
பெற்ற போதிற் கரைகாணுப்
பேரா னந்த நீராகும்

குருகு மலர்ந்த கோசலைதன்
கொங்கை விம்ம லொழிதரப்பால்
குடித்தன் னையிநன் முகமதிக்குக்
குறையா ஆர்வக் கடற்பெருக்கா

முருகு விரிந்த கனிவாயின்
முகுந்த முத்தந் தருகவே
முதிர்சீர்ப் பத்தி ராசலத்தெம்
முதல்வா தருக முத்தமே. (சுக)

1. உருகும் சிந்தனை, மலர்ந்த சிந்தனை எனக்கூட்டுக
2. மகனைக் காணுமல்.

பழியுந் தியகை கேசிகொடும்
பண்டி யதனிற் பாலனெனும்
படிவந் தன்னைச் சுத்தியுறப்
பண்ணு [2] கேனென் றிராப்பகலும்

விழியுந் தியநீ ராலலம்பும்
[3] வேலை புரிந்தெவ் [4] வேலையினும்
[5] வேலை யனைய அருளுருவுள்
விரும்பி நினைந்து நினைந்துருகி

வழியும் பேரன் புடைப்பரத
வள்ளற் கருட்பா துகையுதவி
வருவே மீரே ழாண்டொழிந்து
வாழ்கோ சலத்துன் புடையென்ன
மொழியுந் தருமைச் செங்கனிவாய்
முகுந்த முத்தந் தருகவே
முதிர்சீர்ப் பத்தி ராசலத்தெம்
முதல்வா முத்தந் தருகவே. (சஉ)

*1. வயிறு. 2. கைகேயியின் வயிற்றிற் பிறந்து அதனைப் புனிதமாக்கிய பரதன். 3. செயல். 4. பொழுது 5. கடல்.*

சீர லருஞ்செங் கோல்பிழையாத்
தீர மருவுந் தசரதன்றன்
செப்பு மறுப தாயிரமாத்
திகழாண் டன்பிற் செயுந்தவத்தாற்
சேர லரும்பண் பார்மகவாந்
திருமே னியைக்காட் டுபுகனிதஞ்
சேரா வண்ட கோடியெலாஞ்
செய்ய வயிற்றுட் கண்டமைந்தும்
[1] வேர லரும்பு மலையனைய
வேந்தன் றேளின் மகவாகி
விளங்குந் தன்மா யத்தினுக்குள்
வியப்புத் தானே அடைந்துசிறு
[2] மூர லரும்பும் கனிவாயின்
முகுந்த முத்தந் தருகவே
முதிர்சீர்ப் பத்தி ராசலத்தெம்
முதல்வா முத்தந் தருகவே. (சங)

*1. பிரம்பு. 2. புன்னகை.*

கொற்ற வநுமா னுடன்சீதைக்
கொடியுள் [1]ளையங் கூராமே
கோபப் பரசி ராமர்தவங்
கொண்ட நீர்மை மல்லிகைப்பூ
வுற்ற மாலை சூடுமிட
மிலக்கு வனுங்கா னடைந்ததிறம்
ஒப்பில் குகன்சீர் பரதனுள
முவக்க வணிச்சித் திரகூடத்
தற்ற மறுபா துகையளித்த
லவமார் காக்கைக் கண்ணறுத்த
லாதி யடையா ளங்களுட
ஞழி யளித்து நடந்தகதை
முற்ற வருள்செந் [2] துவர்த்திருவாய்
முகுந்த முத்தந் தருகவே
முதிர்சீர்ப் பத்தி ராசலத்தெம்
முதல்வா முத்தந் தருகவே. (சுசு)

*1. சந்தேகப்படாமல் இப்பாட்டில் அநுமானிடம் சீதைக்குக் கூறும்படி இராமர் சொல்லிய அடையாளங்கள் பல கூறப்பட்டுள்ளன. 2. சிவப்பு.*

[1] நத்தி யழைக்குங் காலுடனே
நண்ணு தவமே பாணித்த
[2] நவையார் வருணன் காப்பாயுன்
னயனஞ் சிவப்புற் றெறிகணையாத்
தத்தி வரும்பே ரலைமாண்டு
தளம்பிக் குளம்புஞ் சலதியிடை
சார்ந்த முத்து [3] மயிலையினிற்
சங்கத் தினிலா [4] மிடங்கரினில்
[5] நத்தினி னிடையா முத்தனைத்து
நவைமிக் கமைய வெதும்பலிலோர்
நாளு மகத்துள் விரும்பிலன்மெய்
நாதங் கடந்த நாதவருண்

முத்தி யளிக்குஞ் செங்கனிவாய்
முகுந்த முத்தந் தருகவே
முதிர்சீர்ப் பத்தி ராசலத்தெம்
முதல்வா முத்தந் தருகவே. (சரு)

*1. விரும்பி அழைக்கும்போது. 2. குற்றம். 3. மின் 4. முதலை. 5. சங்கம்.*

*இச் செய்யுளில் பிற இடங்களில் பிறந்த முத்துக்கள் பழிக்கப்பட்டன.*

**வேறு**

கதிர்நீடு முத்தங்கள் யாவையுஞ் [1] சடமவைகள்
[2] கான்றசிற் றுயிர்களென்னிற்
[3] கடைபட்ட வாதலி [4] னிழிந்தார்க ணொன்றனைக்
காதலித் துயிர்வாழ்தலிற்
பிதிர்நீடு முலகத் தமைந்திட வவாவலே
பெரிதென் றுணர்ந்து முயலும்
பிரகாச மிக்கவருள் உன்கடைக் கண்வழிப்
பெற்றே னிலைக்ககிலதே
யுதிர்வாகி டப்புரியு மலமாயை கன்மவழி
யுழல்கின்ற னன்கருணையா
லுற்றநஞ் சேயனென் றறைகூவில் [5] வருணனென
வொருகணப் போதுதாழ்க் [5]கேன்
முதிர்பேர ருட் [6]புஞ்ச [7] முறுவனிறை செவ்வாயின்
முத்தங் கொடுத்தருள்கவே
மொய்ப்பத்தி யார் [8]துடவை மெய்பத்தி ராசலநின்
முத்தங் கொடுத்தருள்கவே. (சசா)

*1 அறிவற்ற பொருள்கள். 2. கக்கிய சிற்றுயிர்கள் இப்பி சங்கு முதலியன. 3. தாழ்ந்தவை, கடையப்பட்டவை, கடையில் விற்கப்பட்டவை. 4. இழிந்தாரிடத்தில் ஒன்றனை இரந்து பெறுவதினும் சாவதேமேல் என்ற நீதி கூறியவாறு. 5. இராமன் அழைத்தபோது வருணன் தாமதித்த கதையை நினைக்க. 6. கூட்டம், திரள். 7. புன்சிரிப்பு. 8. சோலை.*

[1] கோவாகி யகிலாண்ட கோடிகளில் வதியுயிர்க்
[2] கும்புகளை முற்றளித்துக்
குலவிடுங் கொள்கையினி லகலாது நின்றணிக்
கோசலையெ டுத்துமகிழ

[3] மேவாக முங்காட்டி யிகலிராக் கதர்கள்குல
[4] வேரறுப் பான்[5] கான்புக
விரதமெய்த் [6] தும்பிநிகர் பரதநற் றம்பியுளம்
வேண்டுபா துகையளித்தாய்

[6] ஆவாவ தன்கடற் பெருமையெளி தோசிரசி
லமையவாற் றியநாண்முத
[7] லளவாத தாமின்பம் விழிவழியின் முத்துமுத்
தாய்வழிந் [7] திட்டதென்றால்

மூவாத நின்மகிமை யென்னெனின் கனிவாயின்
முத்தங் கொடுத்தருள்கவே
மொய்பத்தி யார்துடவை மெய்ப்பத்தி ராசலநின்
முத்தங் கொடுத்தருள்கவே. (சஎ)

*1. தலைவனாகி. 2. கூட்டம். 3. விரும்பும் திருவுடல் 4. வேரறுக்கும் பொருட்டு. 5. காடுசெல்ல. 6. யானை. 6. ஆஆ; வியப்புக்குறிப்பு. 7-7 ஆனந்தக் கண்ணீர்த் துளிகள் முத்துப்போல் துளித்தன.*

தத்தத்த தானதன தத்தத்த தானதன தத்தந் தனத்த தனனா.

அற்பத்தி யாகமும ளித்தற்கொ வாதுமிக
[1]வத்தந் திரட்டி யவமே
[2] அத்திக்கு நேரெனம தத்துற்ற தானமென
லற்றங் கதிற்க டையரா

புற்பத்தி யாகுமெதி ரிற்பட்ட வோர்பிறவி
யுட்கண் டிடற்க மைகிலா

[3]ருட்பற்றி னுன்மறுகு துற்புத்தி மாறியரு
ளுச்சங் கொழுத்த மருளா

நற்பத்தி யோவரவ டிக்குற்ற வேலலதி
நட் பென்று முற்றியுனையே

நத்தித்தி யானநிலை யுற்றுப் பராபரமெய்
நட்டுஞ் சுகச்சகசமார்

முற்பத்தி யாளர்பெறு முத்திச்சு கோதயமெய்
முத்தங் கொடுத் தருள்கவே

மொய்ப்பத்தி ராசலவ ணிப்பொற்பு வாயிலிசை
முத்தங் கொடுத்த ருள்கவே. (சஅ)

*1. அத்தம்-செல்வம். 2. யானைபோல. 3. மனத்து உலோபம்.*

தத்தன தத்தன தானன தத்தன தத்தன தானன தத்தன தத்தன தானன

[1]கச்சிசை யப்பெறு பேரிள மைத்தகை பெற்றெழினீடிய
[2]கற்பணி யுட்பொலி தேமலார்

கட்டழ குற்ற[3]ப யோதர விட்டிடை மைக்க ணுலாவிய
கற்புரு வுற்றவிர் சீதைதோய்

பச்சிள மைப்பொலி வார்கதிர் விட்டம ணித்திரு மேனிகொள்
பட்சமி குத்தவி ராகவா

பத்தியு ளக்கட லானவி லக்கும ணப்பெரு மாள்பணி
பற்றிய வற்புத கோலனே

நச்சியு னக்கடி யேனென நச்சில் வெறுத்திடு தீயவர்
நட்பனெ னப்புவி மீதிலோர்

நற்றவ சித்தமி லேனைவெ றுத்துவி லக்கிவி டா [4]தரு
ணக்கழ லுச்சிகு லாவவே

முச்சிய விர்ச்சியி னேடெதி ருற்றரு ளிற்பரி வாயிசை
முத்தம ளித்திட வேணுமே
முத்தர்கள் சித்தர்க ணீடிய பத்திர வெற்பிசை ராமனின்
முத்தம ளித்திட வேணுமே.

*1. வார், இரவிக்கை. 2. இரத்தினுபரணம், கற்பாகிய ஆபரணம். 3. நகில். 4, அருணக்கழல்-சிவந்தபாதம்.*

தத்தன தத்தன தத்தன தத்தன தத்தன தத்தனு.

[1] துற்குண மிக்கவ ரக்கசு ணத்தொடு
தொட்டந ரத்தகைதோய்
துட்டர்க ளிப்பொடு யிர்ப்பலி யிட்டுமெய்
துய்த்தும கிழ்ச்சிய[1]ராய்
நற்குண மிக்கத வத்தரு ளத்தின
டுக்கமு றப்புரியா
[2] நக்கிக ழிக்கலி யிற்றவ சித்திந
டத்தியு னற்புதமார்
நிற்குண நற்சகு ணத்தவிர் பத்திநி
லைப்பமை யப்புரிவான்
நிட்டையி னிற்றலை மைச்சக சத்திடை
நிற்குமி யற்பெறவே
[3] முற்குறு கிக்கரு ணைக்கண மைத்தருள்
முத்தம ளித்தருளே
[4] முக்கிய முற்றௌிர் பத்திர வெற்[4] பிறை
முத்தம ளித்தருளே, (ருய)

*1-1 அரக்கருக்குள்ள குணமும் மனித உடம்பும் உடையராய்க் கொலை செய்து, ஊனைப்புசித்து மகிழ்பவர். 2 சிரித்து இகழும் கலியுகத்தில்; 3. முன்னிலையில் வந்து; 4-4 முதன்மையானவை அனைத்தும் பொருந்திய பத்திராசலம்.*

ரு-வது முத்தப்பருவம் முற்றிற்று.

## 6. வாரானைப் பருவம்.

ஈனம் பொருந்து [1]மூலமலத்
திருளிற் சடமொத் திய[2] லணுக்கட்
கிசையுங் கருவி கரணமளித்
தின்ப துன்பச் செயலறியக்
[3] கானம் பொருந்து மறைவிதித்துக்
கன்மங் [4]துலையொத் திசை [5] தெருட்சீர்
காட்டி யருளக் கருணையினுற்
கமஞ்சூற் கொண் [6]டற் காட்சியினின்
ஞானம் பொருந்துந் திருமேனி
நயந்து காணு முபாசனைச்சீர்
நல்குஞ் [7] சகுணப் பிரமநிலை
நாடி யுடலங் கரைவித்து
வானம் பொருந்தப் புரியின்ப
வாழ்வே வருக வருகவே
வரமார் பத்தி ராசலக்கண்
மணியே வருக வருகவே. (ருக)

***1. ஆணவமலம். 2. சீவன்மாக்கள், 3. இசை பொருந்திய வேதங்கள். 4. தராசு. 5. ஞானம். 6. கருப்ப நிறைந்த மேகம். 7. உருவமுடைய கடவுள் தன்மை.***

[1] முருந்தே நிகர்க்குந் தந்த[1]பந்தி
முகிலா [2] மளக மின்னிடையார்
முகமா மதிக்கோ சலைதனிரு
[3] முளரி விழியிற் பருகிமகிழ்
[4] குருந்தே யாழ்மிக் கினிதொலியார்
குழலே நயமிக் கதுவென்னும்
கொள்கை [5] யறவே குடிவாங்கக்
[6] குதலை யெனவிண் ணவரருந்து

மருந்தே பொழியுஞ் செங்கனி[6]வாய் மகவே
[7]யரக்கர் கோடையற
மாய்க்க மின்னி யெழுந்தமரா
வதியீ ருந்த மனத்தகத்தில்
வருந்தேன் மின்னென் றுற்ற[7]பெரு வாழ்வே
வருக வருகவே
வரமார் பத்தி ராசலக்கண் மணியே
வருக வருகவே. (ருஉ)

*1. மயிலின் இறகடியிலுள்ள குருத்துப்போன்ற பல் வரிசை. 2. கூந்தல். 3. தாமரை. 4. இளங்குருத்து, குழந்தை. 5. முற்றிலும் நீங்க. 6-6. குதலைப்பேச்சு வடிவமாக அமுதத்தைப் பெய்கின்ற கோவைப் பழம் போலும் வாய். 7-7. அரக்கராகிய வெப்பம் நீங்க விளங்கி தேவர்களே வருந்தாதீர்கள் என்று கூறி அவதரித்த.*

தருமந் தழைக்க [1]மணியுருவந்
தாங்கி வருநீ யென்னையிவன்
தவமில் கொடியோ னென்றுபுறந்
தள்ள வழக்குண் டோவடியேன்
கருமந் தழைக்கும் பொய்மாயை
கடக்க வறியேன் மீதுமறக்
கருணை செலுத்தி மெய்ஞ்ஞானக்
கண்ணீந் தருளா தின்னமின்னம்
[2]வருமந் தழைத்துற் றுயெனில்யான்
மற்றூர் கதியென் றடைவேனே
வற்றாக் கருணைச் சாகரமே
மகிமை பொருந்து தெய்வவருண்
[3]மருமந் தழைக்க வுற்றபெரு
வாழ்வே வருக வருகவே
வரமார் பத்தி ராசலக்கண்
மணியே வருக வருகவே. (ருங)

*1. அழகிய வடிவம், 2. வன்மம், மாற்சரியம். 3. மர்மம், இரகசியம்.*

[1] சரத நிறைந்த பத்தியருட்
[2] சலதி போலு முளம்படைத்துத்
தணியாக் காதன் மேற்றுளும்பும்
தகையி லிருகண் புனல்பொழியும்

பரத னெனநின் திருவடியிற்
பதித்த நெஞ்சுஞ் சென்னியிசை
பாணித் தலமுங் கொண்டுருகும்
பரம பாக வதர்பணிசெய்

விரத நிலையும் பதமலரின்
மீதாம் பொடியுத் தூளஞ்செய்
மேன்மைத் தவமும் தந்துநின்ருள்
வீட்டிற் பொருத்தி யருளும்வகை

வரத வருட்சின் மயவின்ப
வாழ்வே வருக வருகவே
வரமார் பத்தி ராசலக்கண்
மணியே வருக வருகவே. (ருச)

*1. உண்மை. 2. கடல்.*

திருவே வருக வென்னருமைச்
செல்வா வருக தேவர்தொழும்
தேவா வருக வுடலுளமுந்
தித்தித் துருகப் புரிதெய்வக்

கருவே வருக வென்னிரண்டு
கண்ணே வருக யான்புகுமெய்க்
கதியே வருக கண்டவர்கண்
கவர்ந்துட் புகுந்து தனையளிக்கும்

தருவே வருக வென்றணிக் கோ
சலைசீ ராட்டிப் பாராட்டச்
சரிக்குங் கரிய மாணிக்கத்
[1]தபனு விதய மலர்மருவு

[2]மருவே வருக பேரின்ப
[3]வைப்பே வருக வருகவே.
வரமார் பத்தி ராசலக்கண்
மணியே வருக வருகவே (ருரு)

*1. சூரியன், 2. மணம், 3. சேமநிதி.*

**வேறு**

பொய்வண்ண மாய[1]வைம் பைவண்ண நாகவெம்
புற்றொத்த பற்[1]றுற்றதாம்
புலைவண்ண மாகியொரு நிலைநின்றி டாதகம்
புவனபோ கத்தலைக்கும்

[2]கைவண்ண மானவிம் [3]மெய்வண்ணம் யானெனக்
காதலுற் றேவளர்த்துக்
காமனுக் கடலேறு [4]மேமனுக் காளாய்க்
கழிந்தநாள் போதாததோ

மெய்வண்ண மேவியான் உய்வண்ண முனதுள்ள
மிசையார ருட்பெருக்கால்
விழிகொண்டு கண்டெனது மொழிகொண்டு தோத்திரம்
விளம்பிக் களித்துருகவே

மைவண்ண நின்னருட் சேவைசா தித்தருள
வந்தருள்க வந்தருள்கவே
மாபத்தி ராசலத் [5]தீபத்தி ராமமுனம்
வந்தருள்க வந்தருள்கவே. (ருசா)

*1-1. ஐந்து தலை நாகம் வாழும் புற்றையொத்த ஆசை. 2. இயல்பு. 3. உடம்பின் இயல்பு. 4. யமன். 5. விளக்குப்போல் விளங்கும் இராமனே.*

[1] பூவையம் பூவை[1]யவிர் சீகரச் சாகரம்
புக்கருந்துங் கமஞ்[2]சூற்
புயலினைக் கரியமா ணிக்கத்தை நிகரொளி
பொருந்திடுந் திருமேனியுங்
[3] கோவையங் கனியினைத் துவரையைவென் றருண்முறுவல்
கொண்டகனி வாயு[3]மழகார்
[4] கோகனத விழிகளுங் கரமலரி சைந்தவான்
[5] கோதண்ட மும் [6]பகழியும்
[7]பாவையென வேகற் புரிந்தவிரு பாத[7]மும்
பரிவிற்றுலங்க வணிதோய்
பண்புமலி சீதாபி ராட்டியினை யோர்[8]வாயு
பாலகன் புடைசூழ்ந்துறு
மாவைபவ சேவைகண் டென்னுயி ருடம்புருக
வந்தருள்க வந்தருள்கவே
மாபத்தி ராசலத் தீபத்தி ராமமுனம்
வந்தருள்க வந்தருள்கவே. (ருஎ)

*1-1. காயம் பூவினையொத்து. 2. நீர்த்துளிகளை யுடைய கடலில் புகுந்து நீரையுண்ட மேகம். 3-3. கொவ்வைப் பழத்தையும் பவளத்தையும் வென்றதும் புன்சிரிப்புக்கொண்டதுமாகிய வாய். 4. தாமரைப்பூ. 5. வில். 6. அம்பு. 7. கல்லாயிருந்த அகலிகையின் சாபநீக்கிய பாதம். 8. அநுமான்.*

தத்தன தனதான தத்தன தனதான தத்தன தனதான தனதன.

[1]கற்நூல் களின்மேவு மற்பமார் சுவையான
கற்பன வநுபோக நிலையையே
கைக்கண கியஞான சித்தியா நினைவோட
கத்திலா ணவமாயை பெருகியே
விற்றநே கருமீயு மத்தமே பொருளாக
வெற்பைநேர் மனைமீதி லிடுவதே
வெற்றியா யுலகூட கத்தின்மா னமிலாது
வெட்டியா யலை[1]வாரை யொருவியே

செற்றமா தியிலாதுன் அற்புதா கரஞான
சித்தியார் திருமேனி கருதியே
சித்தமோர் நிலையாகு மெய்த்தபோ பலநீடு
சிற்பரா பரவாழ்வை யுதவவே

[2] பற்றபா ரதயாவ ளப்பயோ தரமான
பட்சமோ டடியேன்முன் வருகவே
பத்தர்தா யகஞான சித்தர்நா யகமாய
பத்திரா சலராம வருகவே. (ருஅ)

*1-1.* ஞான நூல்களைக் கற்றும் அதன்படியொழுகி ஞானநுபவம் பெறுமல், வாய்ஞானம் பேசி, ஆணவம் மிக்கு, பொருள்தேடி, உலக வாழ்வில் தாம் வெற்றிபெற்ற தாகக்கருதி, மானமிலாது, கற்றும்மூடராய்த் திரிவோரை நினைந்து கூறியது. 2. காதலுக்கு அளவற்ற கருணைக் கடலோடு.

தானதத்த தானதத்த தானதத்த தனதன.

கோசலைக்கு ளாவன்மிக்க கோலமுற்ற குமரனே
கோசிகற்கு வேள்வியைக்கை கூடவைத்த புயபலா

நேசமுற்ற சானகிக்குள் நேருமிச்சை பெருகவே
நீடுவிற்ப டீரெனக்கண் நேரொடித்த மகிழ்நனே

வாசமுற்ற தேவர்புட்ப மாரியிற்பெய் திலகவே
மாபலத்தி ராவணற்கொர் வாளிவிட்ட தருமமாம்

நாசமற்ற மேனிபெற்ற ஞானசித்தன் வருகவே
நாடுபத்தர் கூடுபத்தி ராசலத்தன் வருகவே. (ருகூ)

தத்த தனன தனனதனன தனன தனன தனதன

ஒத்தவுலக முழுதுமடுவு மொளிகொளிரவி குலமதா
டுற்றமகிமை குறைதலிலதி வுல்கமுடன்விண் மிசையுநீள்

சித்தரிதய கமலமலர்கொள் செழியவிதழ்கள் விரியவே
[1] செற்றமிகைகொள் குமுதமனைய சிறியரடல்கள் ஒருவவே

உய்த்ததவமெய் தினர்களுவகை யுளமல்கிடநல் வனமொடே
யொப்பில்பரதன் மகிழவரசி லொளிகொண்மகுட
பத்தர்பிரிய வரியபிரிய பரமவருக வருகவே [மதுகொள்வாய்
பத்திரமலை யிறைவநிறைவொல் பதிமுன்வருக வருகவே
(சுo)

*1. விரோதம்.*

சூ வது வாரானைப் பருவம் முற்றிற்று.

---

## 7. அம்புலிப் பருவம்.

**சாமம்.**

இனனதுமெய் வழியினிடை யிற்கூன்ற னுக்குலவு
மிளமையா கம்பெறுதலா
லிராக்கத விருட்டுணித் தும்பருக் காரமுத
மென்றுஞ் சிறந்திடுகையால்

வனமுற்ற பாகீர தித்தலைவ னுச்சிமிசை
வைக்குமிரு காற்பொலிவதான்
மாணுற்றபரதனு மன்னவன் தன்னுட்சி
வழிமுதலெ னக்கோடலாற்

புனமருவு மானைப்ப டைக்கையொடு போய்க்கொன்று
போடவுமி சைந்திடுதலாற்
போர்வேட னுதணிக் குடையாக மருவுற்ற
பூரணக் கலைபொலிதலா

லனகபத் திரவெற்பி ராமனுனை யொப்பனு
லம்புலீ யாடவாவே
ஆரணத் தலைகொள்பரி பூரணத் தலைவனுடன்
அம்புலீ யாடவாவே. (சுக)

*சந்திரனுக்கு இராமனை ஒப்பாகக் கூறுகின்றது:—*

சந்திரன்,— சூரியனுக்குப் பின் தோன்றி கூனிய உடம்பு பெறுதலாலும், இரவிலே கரியஇருளை ஒழித்துத் தேவருக்கு அமிழ்தம் ஈவதனுலும் சிவபெருமானது திருவடிகள் தன் உச்சியின்மேல் (பக்கபாகத்தில்) வைக்கப் பெறுவதாலும், பரதன் என்ற அரசன் தனது குலமுன்னேனுகக் கொள்ளப்பெற்றதாலும், மானைப் படைக்கவும் அழிக்கவும் சம்மதிப்பதாலும், மன்மதனது குடையாகிய பூரண கலை விளங்குவதாலும்; (பரதன் சகுந்தலை மகன்)

இராமன்:— சூரிய வங்கிசத்தில் வளைந்த வில்லையேந்திய இளமையான வடிவத்தைக் கொள்வதால், அரக்கராகிய இருட்டினை யழித்துத் தேவருக்கு அமுதம்போல விளங்குவதால், கங்கைக் கரசனுகிய குகனுற் சிரசிலணியப்படும் பாதங்களுடைமையால், பரதனைத் தன் ஆட்சியின் முறைமைக்கு உரியவன் என ஏற்றுக்கொள்வதால் சிவமுனிவனுகி வள்ளியாகிய ஒருமானைப் படைக்கவும் மாரிசனுகிய மானைக் கொல்லவும் சம்மதிப்பதால், வேடர் தலைவனுகிய குகனுக்குக் கருப்பஞ்சாறு போலப் பொலிதலால், (பரதன்-கைகேயின் மகன்)

மித்திரனு டன்கலந் தகமேற்பு றத்திலகு
வேற்றுமையு ருக்காட்டலால்
விதியான தனையனைப் பண்பினிற் பெற்றுலக
விவகார சிட்டிதரலா

லுய்த்திடும் பகலவர்க் குள்ளேயொ டுங்கியிர
வுட்கதிர் விரித்திடுதலா
லுள்ளமத் தியிலுனைய மைத்துன தகத்தினிலு
முற்றுமா தவமீதலான்

மெய்த்திரம் பொலியவபி ராமனுந் திரனுகு
மிக்கநா மச்சிறப்பு
விண்டுவா மதிநலம் பெற்றதா லுனையொக்கு
மேன்மைசிறி துங்குறைகிலான்

அத்திரமு டைக்கைபொலி பத்திரிகி ரிக்கிறையொ
டம்புலீ யாடவாவே
ஆரணத் தலைகொள்பரி பூரணத் தலைவனுட
னம்புலீ யாடவாவே (சூஉ)

*சந்திரன்:—* சூரியனோடு கலந்து, உள்ளே கருப்பும் மேலே வெளுப்புமாகிய வடிவத்தைக் காட்டிவதால், புதன் என்ற மகனைப் பெற்று அரசாள வைத்தால், சூரியனுக்குள்ளே ஒடுங்கி இரவில் கதிர்விரிப்பதால் அபிராமன், இந்திரன், என்ற பெயர்களையுடைமையால்.

*இராமன்:—* நண்பனாகிய சுக்கிரீவனோடு கூடி அவனது அகத்துக்கும் புறத்துக்கும் வேறுபாடு காட்டியதால், பிரமாவாகிய புதல்வனைப் படைத்து உலகைப் படைக்கச் செயலால், சூரியனுக்கு அந்தர்யாமியாக இருந்து ஒளி பரம்புவதால், அபிராமன் உபபேந்திரன் என்னும் பெயர்களைப் பெறலால். சந்திரனும் ராமனும் சமமாவர். ஆனால் ராமன் சந்திரனைத் தன்னுள்ளே படைத்துத் தான் அவனுள்ளேயும் இருந்து மகாவிஷ்ணுவாகவும பொலிவுகுன்றான் என்ற சிறப்பும் கூறப்படுள்ளது.

தாமதக் குணமேவு காமுகர்க் கிகலான
தன்மைபெற் றுப்பொலிதலாற்
சரராசி யொன்றுபய ராசிநண்ணூர் கண்மெய்
தங்கு திரராசியமைவிற்

காமர்வடி வேந்தலான் மேற்கான வேலையாழ்
காலமிசை யுந்தணிமையாற்
காதலாம் புந்திவா ரத்திருவி ழாவணிம
கத்துவந் தாங்கு தகையாற்

பூமருவி னேருயிரி னுள்ளே கலந்துற்ற
போகமுற் றூட்டு செயலாற்
புகுமிரா கவனுனக் கிணையாவ னிவனலாற்
புகலநிற் குந்துணையிலை
ஆமகிமை யுன்னுளத் தேமதிகொ டாய்ந்திறையி
லம்புலீ யாடவாவே
ஆரணத் தலைகொள்பரி பூரணத் தலைவனுட
னம்புலீ யாடவாவே (சுஙு)

*சந்திரன்:—* தாமதக்குணம் பொருந்திய காமமிக்கார்க்குப் பகைவனுவான், பிரிந்தவர்கள் பயக்கடலில் விழும்படி செய்யும் வடிவோடு கடலில் தோன்றுவான். மேலைக் கடலில் ஆழவேண்டியபோது அதனை அணுகுவான். மகனுகிய புதன் பிறந்ததால் திருவிழாக் கொண்டாடினுன். கலந்த காதலருள்ளே புகுந்து இன்பம் ஊட்டுவான்.

*இராமன்:—* இராமனும் காமுகர்க்குப் பகைவனுவான். பகைவர்க்கு அச்சுக்கூட்டத்தையுண்டாக்கும் அயபுத்திரனை யேவும் வில்லைத் தாங்கிய வடிவினன். பிரளம் காலத்தில் கடல்மேல் துயில்வான். புதவாரத்தில் வழிபடப்பெறும் மகத்துவம் உடையவன். உலகத்திலுள்ள உயிர்களுக்குள் இருந்து போகம் ஊட்டுவான்,

**பேதம்.**

காமுகர்க் கொப்பில்வட வாமுகத் தனலென்று
காணநின் [1] றலரேற் குவாய்
காணுமிவன் மெய்த்தசர தன்றவத் தால்வரு
கலைக்கோட்டு மாமுனிசெயும்
[2]தீமுகத் தமைவரப் பிரசாத வடிவந்
திரண்டருண்மெய் பெற்றசெல்வன்
[3]செப்புநீ நாணுது நாண்மீன மங்கையர்
திளைப்புற்ற தன்றிநெஞ்சந்

தோமுகந் துற்றகுரு பத்தினியை யாண்டுசந்
தோடமிகு தோடமுற்[3]ருய்
[4]சொல்லுமிவ னேகதா ரங்கொள்ளும் விரதர்தஞ்
சூடாம ணித்தகையினன்

ஆமுகப் பொடுபத்தி ராசலன் கூவறவ
மம்புலீ யாடவாவே
ஆரணத் தலைகொள்பரி பூரணத் தலைவனுட
னம்புலீ யாடவாவே. (சுசு)

*சந்திரனைவிட இராமனுக்குள்ள சிறப்புக் கூறடுப்ப கிறது. 1, அலரேற்குவாய் — பழிச்சொல்லை ஏற்பாய் 2. தீமுகம் — யாகாக்கினியில். 3-3. சந்திரன் பல மனைவி யரை மணந்தவன். குரு பத்தினியைக் கற்பழித்தவன் 4 இராமன் ஏகதார விரதங்கொண்டவரில் சிறந்தவன்*

[1]இராக்கதர் தமக்குறவ னுநின்று தானவ
னெனும்பெயர் படைத்தி[1]ழிவைநீ
[2]யிவனிமப் பகைவனுஞ் சூரியன் குலமீதெ
டுத்திட்ட உருவமுடனே

பராக்கமை யிராமனென் றியாவரும் பரவநிகழ்
பாக்கியமெய் மந்திரப்பேர்
படைத்திட்ட [2]வன்றெரிதி [3]நீயுடலின் மீதிற்
பதிந்துற்ற வோர்களங்கம்

பிராத்தவினை தீர்க்கமுடி யாச்[3]சிறியை [4]யிங்கிவன்
பேரரக் கர்ச்சாடியே
பெருமுனைவன் மனைவியக லிகைகளங் கந்தாள்பெ
றுந்தூளி யான்மாற்றி[4]னன்

அராக்கனஞ் சூழ்பத்தி ராசலன் கூவலரு
ளம்புலீ யாடவாவே
ஆரணத் தலைகொள்பரி பூரணத் தலைவனுட
னம்புலீ யாடவாவே (சுரு)

*1-1. சந்திரன் அரக்கருக்கு உறவாகித் தானவன் என்று பேர்பெற்று இழிவடைந்தான். 2-2. இராமன் சூரிய குலத்தில் பிறந்து. எல்லாரும் பாராட்டும் மந்திரத்தையே தன் பெயராகப்பெற்று உயர்ந்தவன். 3-3. சந்திரன் தீர்க்க முடியாத களங்கத்தையுடையவன். 4-4. இராமன் அகலிகை களங்கத்தையும் தன் பாததூளியால் மாற்றினுன்.*

**தானம். வேறு.**

[1] தண்ட கார ணியத்தினிடை
சரிக்குங் காலத் தகன்றசிலே
தமது வருத்தந் தணித்தலி னுற்
றயைகூர்ந் தொப்பின் மாமேரு
கொண்ட பால னுதியெனக்
கொடுத்த வரத்திற் ரேய்ந்துதவங்
குயிற்றி வரங்கேட் டிடத்தனேயே
கொடைசெய் பெரு[1]மாள் வலிதிலுனே
விண்ட வருளாற் கூவினடே
மிகுமுன் றவமோ விரண்டுமொன்றும்
விளேவோ வெதுவா கினும் [2]வலது
விழியா டிடுமற் புதமதனு
லண்டர்க் கரியான் றன்னெடுநீ
ஆட வாரா யம்புலியே
அனகப் பத்தி ராசலனே
டாட வாரா யம்புலியே. (சாசா)

*1-1. தங்கள் வருத்தந்தீரத் தாங்கிய கல்லுக்கு மேருவின் தலைவனுக வரங்கொடுத்தார் இராமர். தவஞ் செய்து மேலும் வரங்கேட்கத் தன்னையே அதனுக்குக கொடுத்தார். 2. வலது விழியாடல் ஆண்களுக்கு நற்சகுனம்.*

விரசை யனைய கௌதமியின்
மிக்க தீரத் தருகுளத்தின்
மேலாந் தீரத் தவம்புரியு
வியன்நா ரதன்கௌ தமமுனிவன்

தரமன் னியமெய்ப் பரமுத்தித்
தன்மை படைத்தா ரிவரன்றித்
தகுசீ ராம தாசன் முனோர்
சரிதைபலவே யாமவைக

ளுரமன் னியநின் னுளமறியு
முண்மை கண்டு மவத்தலையே
லுன்னை யுறும்பாக் கியத்தைவறி
தொருவா திச்சை ஞானநல்கு

மரசன் விரும்பலுணர்ந்திவனோ
டாட வாரா யம்புலியே
அனகப் பத்தி ராசலனோ
டாட வாரா யம்புலியே. (சுஎ)

**தண்டம்.**

தனதத்த தானதன தனதத்த தானதன தானு தந்தனனு.

[1] தமதுட்கு லாவுகுறை களையுய்த்து நாடுகிலர்
சார்வார் தம்புடையார்
தவறொற்றை யேனும்விடு கிலரச்சு பாவநிலை
சாலோர் [1]பண்பதனுன்

[2] மமதைக்குண் மூழ்கியுல கிருள்செற்று மேனிலைகொள்
வான்மீ தொன்றினை[2]யே
[3] வரமிக்க ராமனெதிர் பரசுற்ற ராமனுள
மாகோ பங்கொடுநேர்

அமயத்தி லேநிலவு கதைசற்று ஞுதறிவி
லாயா தம்பரமே
லலேபெற்றி யாலெதிரி னிலவக்கொள் கோரநிலே
யாரே கண்டமைவார்

[4] மமநிற்க ருதவகை யிசைவிற்கை ராகவன்முன்
வாவா வம்புலியே
மகிமைத்த போதனர்கள் பணிபத்தி ராசலன்முன்
வாவா வம்புலியே. (சூஅ)

*1-1. தங்கள் குறையை நீக்கிக்கொள்ளவும் விரும்பாமல் பிறரது குறையையே நீக்கியுதவுவது மேலோர் இயல்பு என்றது. 2-2. சந்திரன் தன் குறையாகிய களங்கத்தை நீக்கிக்கொள்ளாமல் உலகத்திருள் நீக்குகின்ருன் இது வஞ்சப்புகழ்ச்சி. 3. பரசுராம கர்வ பங்கத்தை வினேவூட்டியவாறு. 4. எனது என்னும் மமதை.*

தத்தன தனதான தத்தன தனதான தான தந்தன.

நத்துகே கயன்மாது சொற்றவா பரதாழ்வ
ஞுடு டொன்றுகநீ
நற்றபோ தனர்போல்வ னத்திலே கெனுநீர்வி
ஞுவா நின்றிதமா

யொத்துமே விடல்போல்வி டுப்பஞு கிலுமாவ
லூடா டுந்தகைசா
லுற்றசோ தரனீடு செற்றமா குவனீர்மை
யோகோ முன்பவமே

துய்த்துநா டுதியாயி னிற்குநே ரிடுதீமை
யோர்வாய் சிந்தையுளே
யொப்பலா மதிதீரி லுற்றவோர் விதிநீடு
மோர்பே ருங்கெடுமே

வத்துவா மபிராம சித்தனேர் வெகுளாமுன்
வாவா வம்புலியே
மற்றுநே ரிலனுன பத்திரா சலனேரில்
வாவா வம்புலியே. (சாகூ)

*இலக்குமணனது கோபத்தை எடுத்துக்காட்டி அச்சுறுத்தி யழைத்தது கூறுவது இப்பாட்டு.*

தத்ததன தத்ததன தத்ததன தத்ததன தானு தந்தனனு.

சித்தமிசை யிற்கருது மப்பொழுதி லுய்த்துணர்வு
தேரா தங்கிசைநீர்
[1] திட்டியெதி ருற்றுரைசெய் திட்டவரு ணற்கருள்செய்
தேதோ யம்பினையா
னுய்த்தழிழி [2] லக்கிசையெ னப்புகல்க ணத்திலகி
லோர்யா ருங்கணமே
லுற்றிடுமு னெத்தகைப டைத்தனர்கள் வெற்றியென
வோதா நின்றவெலா
மெய்த்தகைப டைத்தபடை யிற்குலவ வைத்திலகு
மேலோ னிங்கிவனே
மித்தபடி யுற்றிடிலு டுக்குலநு டுக்குலவும்
வீரு மின்றெனிலோ
வைத்தமெ யிழப்பையிது சத்தியமி கக்கடிதில்
வாவா வம்புலியே
மற்றிணையில் பத்திரகி ரித்தலைவன் முற்கடிது
வாவா வம்புலியே. (எம)

*வருணன்மேல் விடுவதற்குக் கோத்த அம்பை, யார்மேல் விடுவது என இராமர் கேட்க, அவன் தூரத்தே தீவிலுள்ள அசுரர்கள்மேல் விடுகஎன வேண்ட, அங்ஙனமே இராமர் எய்த ஓரம்பு அவ்வசுரர்களை அழித்த அற்புத வீரச்செய்தியை எடுத்துக்காட்டி அச்சுறுத்தியவாறு*

1. கண்ணெதிர். 2. குறி.

எ-வது அம்புலிப் பருவம் முற்றிற்று.

## 8. சிற்றிற் பருவம்.

ஓங்கிப் பொலியுந் தசரதன்ற
[1]னுபய புயமுங் கோசலைதன்
னுடைய மடியுங் கண்ணிணையு
முனது கமலத் திருவடிகள்

நீங்கிற் றென்று நீங்காதே
நீர்மிக் கிறைத்து வருந்தியுறு
[2]நீர்மை யறியாய் போல்யாமுன்
னிறைக்குந் தவத்தின் பயனுயெம்

பாங்கிற் பொருந்துந் தெரிசனைக்குட்
பரமா னந்தம் விரவினநின்
பாதங் களைப்பங் கசமெனயாம்
பகர்சொற் காக்கும் பண்பென்னத்

[3]தீங்கிற் பொருந்தச் சிறியேஞ்செய்
சிற்றிற் சிதையேல் சிதையேலே
திருப்பத் திரவெற்பிசை யருமைச்
செல்வா சிற்றிற் சிதையலே (எக)

*1. இரண்டு தோள்கள். 2. தன்மை. 3. தீங்கிற் பொருந்தச் சிதையேல் என இயைக்க.*

ஆற்று [1]மகத்தை யழிக்கு[2]மிக
லமைதா டகையை வதையாம
மனைத்தும் [3]லரிவை யெனவே நின்றுலக
படைத்த கோசிகன்றுன்

சாற்று மொழியை வேதமெனத்
தலைக்கொண் டுடனு ருயிர்கவரும்
சரம்விட் டருணின் பெருந்தகைமை
தனக்குன் றிருத்தாட் டுணையுமீள

தேற்று மகிழ்வா லதற்கொரங்க
மென்று விளையா டாநின்றே
யின்பக் கண்ணீ ராட்டுமெமை
யின்னற் கண்ணீ ராடியுறும்
[4]சேற்று ளழுந்தச் சிறியேம்யாம்
செய்யுஞ் சிற்றில் சிதையேலே
திருப்பத் திரவெற் பிசையருமைச்
செல்வா சிற்றில் சிதையேலே (எஉ)

1. யாகத்தை. 2. பகை, வலிமை, 3. பெண் என்று 4. சேற்றுள் அழுந்தச் சிதையேல் என இயைக்க.

[1]மருப்பா யணிக்கொந் தளகபந்தி
மயிலா கியகே கயன் மடந்தை
வலிது தேடி வைத்தமணி
மகுடம் புனையான் சடைதாங்கி
யுருப்பா லவிர்[2]வற் கலையுடுத்தி
யோவாக் காதற் பெருவெள்ள
முளமீ தமையப் பெரும்பரத
சினெப்பு மரற் பெரிதென்றுள்
விருப்பா லெய்தும் [3]பாதுகையின்
மேற்சங் கவிர்சக் கரக்குறிகண்
மிளிர வமைத்துத் தந்த[3]சுர
[4]வேத நாத முடித்தலந்தோய்
திருப்பா [4]தத்தாற் சிறியேஞ்செய்
சிற்றிற் சிதையேல் சிதையேலே
திருப்பத் திரவெற் பிசையருமைச்
செல்வா சிற்றிற் சிதையேலே. (எங)

1. வாசனை பரவும் பூங்கொத்தணிந்த கூந்தல். 2. 2, மரவுரி. 3.3. இராமன் தனது திருவடிகளைப் பாதுகைகளின்மேல் வைத்தபோது அவற்றிலுள்ள சங்குசக்ர ரேகைகள் அப்பாதுகைகளிற் பொருந்தின என்றவாறு. 4.4 வேத முடிவாகிய உபநிடதங்களிலும், நாதமுடிவிலும் பொருந்திய பாதங்கள்.

வாசங் கமழுந் தைலமிக
வார்த்துச் சீத்துச் சீர்த்திபெற
வயங்கும் உச்சிக் கொண்டையிட்டு
மலர்மா லைகள்மேற் புனைந்துபிர

காசங் கலந்த சுட்டியுடன்
கவின்ற பட்டம் புயவலயங்
கதிர்முத் தாரத் துடனரைஞாண்
கலந்து [1]சிலம்புஞ் சிலம்பணிந்து

நேசங் கலந்த கோசலைதா
னின்னை [2]மறுகிற் குறுகவிடல்
நேடி யுருகு மேழையரேம்
நெஞ்சங் கலக்க வோநிறைவார்

[3]தேசங் கலந்த திருவடியாற்
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
திருப்பத் திரவெற் பிசையருமைச்
செல்வா சிற்றில் சிதையேலே (எசு)

*1. ஒலிமிகும் சிலம்பு. 2. வீதியில். 3. ஒளி.*

[1]தூய வநுமான் கைத்தலமோ
துணைப்பொற் புயமோ சென்னியதோ
துங்கச் சீதா பிராட்டியணித்
தொடியா ரிணைக்கைத் தலமோவான்

றோய விரும்பித் தவம்புரிமெய்த்
தொண்டர் விழியோ கருத்தோநற்
சொல்லோ வதிற்றோய் செம்பொருளோ
துரிய முடியோ வழிபாடு

மேய திருக்கோ யிற்பீட
மேலோ மிதிலை யிசைவழியோ
வேதாந்த தமதோ சித்தாந்த
மிசையோ யாமாட்டயர் மணிது

சேய வடிவைத் திடற்கமையாச்
சிறியேஞ் சிற்றிற் சிதையேலே
திருப்பத் திரவெற் பிசையருமைச்
செல்வா சிற்றிற் சிதையேலே (எரு)

*1. யாங்கள் விளையாடும் இந்த மண்ணானது அருமானது உள்ளங்கை முதலியன வல்ல. ஆகையால் அவற்றால் படத்தக்க உன் திருவடி இந்த மண்ணில் படும்படி சிற்றிலைச் சிதையேல் என்றவாறு*

**வேறு**

என்னிதய மலரின்மிசை பின்னியநன் மணமாயி
சைந்துமல மாயைநீற்றி
இருவிழிய தாயதனு ளொருவழிய தா[1]மணியி
சைந்திடும் பாவை[1]யாகி

அன்னியமி லாதென்று நன்னியதி [2]மேலவர்க
ளகமென்பு நெகவுருக்கி
ஆனந்த மயமான [3]வானந்த வெள்ளமிசை
யகலாம [4]லாடுவித்தே

[5]உன்னிய நினைப்புகளின் முன்னியற் றுணையாகி
யுய்த்திக பரங்கொணலமே
யுணர்வித்து மெய்மைநிலை [6]புணர்வித்து மாறு
[7]வுவப்புமென் மேற்குலவவே

சென்னிமிசை சூட்டுநின் றிருவடித் துணைகொடெஞ்
சிற்றிற் சிதைத்திடேலே
திலகமெய்ப் பத்திரா சலவிசைக் கத்தனே
சிற்றிற் சிதைத்திடேலே (எசா)

*1. கண்ணிற் கருமணியாக விளங்கி. 2. ஞானியர்கள் 3. பராகாயமளவும் பரவிய வெள்ளத்தின்மேல். 4. குளிக்கச்செய்து. 5. நினைத்த. 6. கூட்டி, 7. மகிழ்ச்சி.*

கள்ளவிழ் மணத்திரு மலர்க்[1]கும்ப லுடனேக
மழ்ந்த[2]துள வங்கலந்தே
[3]கற்குயி ரளித்தநின் பாதார விந்தங்க
ளிற்கரங் கொண்டுபெய்தே

உள்ளக நெகிழ்ந்துநெக் குருகியா னந்தநீ
ருற்ருகி மெய்ஙனைப்ப
உன்னருட் பெருமகிமை யுன்னியுன் னிப்பெரிது
மோவாது பாடியாடி

யள்ளன்முந் நீருடைப் பூமகட னிருதயத்
தவிர்திருப் பதிகள்பரவி
யடியருட் கூடிமிக் களவில்சித் தாடிமுற்
றடிமையுள [4]விற்றிலிடுமோர்

தெள்ளருட் பெருவீட தாமடிக ளாலெமது
சிற்றிற் சிதைத்திடேலே
திலகமெய்ப் பத்திரா சலவியற் கத்தனே
சிற்றிற் சிதைத்திடேலே. (எஎ)

*1. கூட்டம். 2. துளசி. 3. கல்லாயிருந்த அகலிகையைப் பெண்ணாக்கிய செயல் குறித்தது. 4. முடிவில்*

தான தத்த தானன தானதத்த தானன தத்தத் தனதானு

[1]கானலுற்ற நீரென வோடியெய்க்கு மானிடர்
கர்த்துப் புவிமீதே
காதன்மிக்க மாதர்கள் [2]சேயரிச்சை மேலிடு
சட்டத் தினிலாழ்வோர்

தானமிக்க வேதரு வாரைநத்தி வாடியி
தச்சொற் பகர்வாயோர்
சாருமற்று ளார்கள்ப லோருமுற்ற பாழ்வினை
தப்பிக் கதிசேர்வான்

ஞானமிக்க பேரநு பூதிசித்தி யாயுள
நத்துற் றதுபோலே
நாளிலத்தின் மேல்வினை யாடிடச்செய் தேயரு
ணட்புற் றிடுமேலோர்

தேனணிச்[6]ச ரோசமெய் வீடளித்தி டாமுனோர்
சிற்றிற் சிதையேலே
சேயபத்தி ராசல மேயபொற்பி ராகவ
சிற்றிற் சிதையேலே (எஅ)

1. பேய்த்தேர் நீர். 2. மக்கள். 3. தாமரை.

தத்ததன தானதான தத்ததன தானதன தத்ததன தானு

கற்பகம் விராவுமல [1]ரத்தமிசை யேகொடுக
ளிப்பினுட னேநீள்
கற்புறு புலோமசைமு தற்சொலர மாதரிரு
கைத்துணைக ளாலே
யற்பகம் விடாதவடி யர்க்குநடு மேவிநிறை
யற்புதந வீரா
[2]லத்தவுல கோர்களிக முற்றவரி னேரெனவ
கத்திலறி யாதே
விற்பதிகை மேயமகி மைச்சுகவ பாரவருண்
மெய்ச்ச [3]குண மீதே
வித்தியபி ரேமமிசை பத்தியர்க ளாகுமணி
மெச்சுநல மேசார்
[4]சிற்பரவி யோம்விசை மிக்கவபி ராமவெமோர்
சிற்றிலழி யேலே
திக்கினர் பராவிசைகொள் பத்திர[5]த ராதரவொர்
சிற்றிலழி யேலே. (எகூ)

1. கையிற்கொண்டு. 2. பொன்னுலகத்தவர், தேவர்கள். 3. உருவத்திருமேனி. 4. ஞானகாயம். 5. மலை.

தனனு தத்த்த் தனனு தத்தன தனனு தத்தத் தனதானு

வரமார் பத்தித் துறையா ருத்தம
வழிபா டுற்றெற் றையு நாலா
மறையா லெட்டற் கரிதா மற்புத
வளமே [1]வத்தித் திரையேநேர்

தரவா னத்துற் றிடுவார் துய்த்தமை
தகையா ரப்பு த்தமிழ்தாமோர்
தமிழான் மெத்தக் கனிவார் நற்றுதி
சலியா மற்செப் புறுமாறே

திரமார் சித்தத் திடைவே றற்றிசை
திருநா ளைக்கட் புலநேரே
தெளியா முற்பட் டவமே மிக்கியல்
சிறியோர் நக்கப் புவிமீதே

பரமா மெய்ச்சித் தபிரா மச்சுக
பகவா சிற்றிற் சிதையேலே
பணிசீ லப்பத் திரநீள் வெற்பிசை
பதியே சிற்றிற் சிதையேலே (அ)

*1. கடலின் அலை.*

அ-வது சிற்றிற் பருவ முற்றிற்று.

---

## 9-வது சிறுபறைப் பருவம்.

சத்தமுட னேபரிச முருவமிர சங்கந்த
மான[1]வையு ணர்வமைந்த
தன்மையிற் பறவை[2]விரு கங்களொத் திகமீது
தானுண் டுறங்கிமாயப்

பித்தமிகு காமத்தி லின்பதுன் பங்கொண்டு
[3]பிள்ளைமைப் பேறமைந்து
பேசிடு [4]பொதுத்தகைமை விட்டிடுமே [6]லுற்றிடும்
புறவியென வேகாட்டிட

வொத்தவுடை தேடிப் புனைந்து[5]கா தலியுள்
ளுவந்திடப் பூணணிந்து
முரமில்புதல் வன்பெர்ருட் டறமற்ற பொன்னிட்ட
உன்னுநர்முன் னுவலுருவினுஞ்

சித்தமிக் கிழிவுளரெ னச்சமர்த் துடனுனது
சிறுபறை முழக்கியருளே
செயபத்தி ராசலவு தய[6]மித்தி ராவுனது
சிறுபறை முழக்கியருளே. (அக)

*1. ஐந்து அறிவுகள். 2. ஆடுமாடு முதலிய விலங்கள். 3. புத்திர பாக்கியம் பெற்று. 4. சமரச நன்குனெறி. 5. மாற்றி உடையணிவதுபோல வேறு வேறு பிறவியெடுப்பர் என்றவாறு. 6. சூரியன்.*

ஐம்புல நுகர்ச்சியே பெரிதென்று வெறிகொண்
டலைந்துயி [1]ருலைந்தொழியுநா
[2]வகமேவு மத்தமுலை முகமேவு மத்தத்
தறைந்திடு முழக்கமுடையார்

வெம்[3]பல வுடம்பையிடு காட்டுய்த் தழற்கொள்ளி
மெய்ச்சிரத் தேமுழங்க
மென்கரத் திட்டிருகண் ணீர்விட்டு வாய்விட்டு
விம்மியழு மைந்தனீடு

மொய்ம்புல வமங்களவில் வாழ்க்கையு டமிழாதுன்
[4]முகின்மேனி கண்டுருகிமான்
முதிர்சிகி யெனக்களிப் புற்[4]ருடி யேமிக
முழங்கித் துதிக்குமின்பந்

[5]தெம்புலவு வோர்களே பத்தரென வுன்னணிச்
சிறுபறை முழக்கியருளே
செயபத்தி ராசலவு தயமித்தி ராவுனது
கிறுபறை முழக்கியருளே. (அஉ)

*1. அழிந்து, 2. உள்ளங்கை. 3. ஊண் உடம்பு. 4. மேகத்தைக் கண்ட மயில்போல் மகிழ்ந்து ஆடி. 5. மகிழ்ச்சி மிக்கவர்கள்.*

அலைமுழங் குங்கடலை யுண்டெதிர் முழக்கமுற்
றமைவா னிடம்பொருந்தி
யார்நம்மை யொப்பர்வடி விற்பொழி தலாமுழக்
கம்புமா ரியிலென்னவிண்

தலைமுழங் கஸியோதை யார்வரைக் கோயிலார்
தசரத குமாரனென்று
தகுமுழக் கங்கொண் டிடப்பொழிந் தாம்படித்
தலமீது சளசளென்ன

மலைமுழக் கங்கொண்டு தொண்டர்தாட் டுகளெலாம்
வாவிநிறை வித்தாடுவார்
மகிழ்வினி லிராமவென் றேதிடு முழக்கமெதிர்
வாய்விண்டி யம்பு முறைபோற்

சிலைமுழங் குந்தொனியி னுடனிசைந் தபிராம
சிறுபறை முழக்கியருளே
செயபத்தி ராசலவு தயமித்தி ராவுனது
சிறுபறை முழக்கியருளே (அ௫)

*இப்பாட்டு இராமரது வில்லின் ஓசையைச் சிறப்பித்துக் கூறியது.*

[1]பொருப்பணிக் கோயிலை யியற்றிடத் தான்முன்செய்
புண்ணியத் திறநினைந்தே
புளகித்த [2]ராமதா சன்கனிவி னுமமே
புகன்முழக் [2]கும்பணிசெய்வோர்

விருப்பணிப் பொன்றரு முழக்கமும் பெற்றவர்செய்
வேலையின் பெருமுழக்கும்
மேல்வந்து கண்ணுேக்கு வார்களி முழக்குமணி
வேதமந் திரமுழக்கும்

தருப்பணிய வாற்றுமந் திரகும்ப வபிடேக
சற்கன்ம மிசைமுழக்குஞ்
சங்குசே கண்டைமணி யாதியின் முழக்கிருஞ்
சலதியின் முழக்கமிகையார்

திருப்பணி முழக்கிசை பெருக்கிற வுனற்கரச்
சிறுபறை முழக்கியருளே
செயபத்தி ராசலவு தயமித்தி ராகுணில்கொள்
சிறுபறை முழக்கியருளே (அச)

1. *மலைபோன்ற கோயில்.* 2. *இராமதாசர் நின்னைப் பாடிய பாடலின் முழக்கம் இப்பாடலில் பத்திராசலத்தில் இராமன் கோவிலில் நிகழும் பலவகை முழக்கங்களும் கூறப்படுதல் உணர்க.*

[1]அளிமுழக் கிசைபரி மளத்தொடைக் காருருவி
லமைமின்னல் பலவுறுதல்போல்
அவிரமணிப் பணிகளொன் றேடொன்று தாக்குதலி
னதிர் முழக் குந்தேரின்மேல்

வளிமுழக் குடனுற வசைந்திடு முழக்குமத
மாக்களின் பெருமுழக்கு
மணிவெண் டயத்தாட் பரிக்குலத் தனுமான
வகைமுழக் கும்பரிசனர்

களிமுழக்கும் குலவ வமர்புரியி ராவணன்
கடை முழக்கம் புரிய[1]நீள்
[2]கணைமுழக் கஞ்[3]சமர்க் கண்சிர முடங்கிவீழ்
காட்சிகண் டும்பர்யாரும்

தெளிமுழக் கம்புரி செயற்காட்டல் போலுனது
சிறுபறை முழக்கியருளே
செயபத்தி ராசலவு தயமித்திரா கடிது
சிறுபறை முழக்கியருளே. (அரு)

*1-1. இராவணன் போர் புரியுங்காலத்து நிகழும் ஒலிகளைக் கூறியவாறு.* 2. *அம்பின் ஒலி.* 3. *போரில்.*

**வேறு.**

பாடும் பாடு மெனுமுழக்கும்
[1]பணியும் பணியு மெனுமுழக்கும்
பத்திப் பாக வதரையெதிர்
பாரும் பாரு மெனுமுழக்கும்

போடும் போடு மன்னமெனப்
போதும் போது மெனுமுழக்கும்
புகுமின் புகுமின் எனுமுழக்கும்
புகழ்மின் புகழ்மின் எனுமுழக்கும்

கூடுங் கூடு மெனுமுழக்கும்
கொண்மின் கொண்மின் எனுமுழக்கும்
குறையா தென்றுஞ் சாலையெலாம்
கொண்டன் முழக்கந் தெரியாமன்

மூடும் பத்தி ராசலத்தாய்
முழக்கி யருளாய் சிறுபறையே
மூவாத் தேவா கைக்குணிலான்
முழக்கி யருளாய் சிறுபறையே (அசூ)

*1. வணங்குங்கள். 2. இப்பாடலில் பத்திராசலத்தில் தொண்டர் குழுவில் எழும் முழக்கங்கள் கூறப்பட்டுள்ளன.*

இகத்தி லழுத்து மைம்புலப்பாம்
பினுக்கோ ரிடியா யென்னுயிரென்
றிடுமோ [1]ரசுணப் புள்ளினுக்கா
மிசையாய்க் கன்ம மாயையெனச்

சகத்தி லிருண்ட விரவினுக்குச்
சயக்[2]குக் குடத்தின் பெருமுழக்காய்த்
தகுதத் துவமாந் தேனினுக்குன்
சயகோதண்ட நாணொலியாய்ச்

சுகத்தி லிசையான் மரவாமெய்த்
தூய பிராட்டிக் கவிர்மிதிலைத்
தொக்க வவையார் விற்றெனியாய்த்
துணைக்கா திடத்தி லகலாதே
முகத்தி லம்மைகண் காணநின்று
முழக்கி யருளாய் சிறுபறையே
முதல்வா பத்தி ராசலனே
முழக்கி யருளாய் சிறுபறையே (அஎ)

*இப்பாடலில் இராமனது சிறுபறை ஓசையை ஐம் புலமாகிய பாம்புக்கு இடியோசை யெனவும் பிறவுமாக உருவகத்திருக்கும் அழகு மகிழ்தற்குரியது.*

*1. அசுணம் என்பது இன்இசைக்கு மகிழும் ஒரு வகைப் பறவை. 2. கோழி.*

தனதன தனத்தனன தனதன தனத்தனன
தனதன தனத்தனதன.

[1]அலையுடை யுடைப்புவி[1]யின் மிடியின்வள மற்றிசைய
வகைமழை முழக்கு நெடிதா
மணிகுலவு நற்றளிக டொறுமகிமை மிக்கதிரு
வருண்மலி முழக்கு மறைதோய்
தலைமைபெர் லி யற்புதநி லிசைவள மிசைக்குநர்கொள்
தமதுகை முழக்கு மணியார்
தமிழினய முற்றிலகு மதுரித கவிப்புலவர்
சயசய முழக்கு மனமே'ர்
நிலைபெறு தவத்தருள மிசையதிச யத்தசந
ஙிரைபெறு முழக்கு முயர்வா
னிலமர விருக்குமுல கிவைகள்சுப முற்றகமெய்
நெகிழ்சுக முழக்கு மிகவே
[2]சிலைபொலி தடக்கைரவி குலதிலக நற்[3]குணில்கொள்
சிறுபறை முழக்கி யருளே
திருமருவு பத்திரமெய் வரையவிர் [4]தளித்தலைவ
சிறுபறை முழக்கி யருளே (அஅ)

*1. கடலினை ஆடையாக உடுத்த உலகம்.*

*இப்பாட்டில் இராமர் சிறுபறை முழக்குவதால் நிகழக்கூடிய பல்வேறு முழக்கங்கள் கூறப்பட்டன.*

*2. வில். 3 பறையைத் தட்டுவதற்குரிய சிறுகோல் 4. கோவில்.*

தனதன தானத்ததன தானு தனதன தனத்ததன தானு

மணிமுகி னிகர்த்தவடி வோனே
மகிமைகொ [1]ளிலக்குமண மேலோன்
மனமெனு [2]மிலக்குமண மார்தேன்
மலர்மிசை யிருக்கையக லானே

கணிதமில் பவக்கடலின் மீதார்
கரையறி தலற்றமன மேலே
கவலைபெ ருகப்புரியு மாயா
கபடமு முதற்றுயரு மேலோர்

பணிவிடை யியற்றிமல ரேநேர்[2]
பதமல ருகுத்ததுகண் [3]மீதே
படியவ மைவித்திடைவி டாதே
பரசுக நிலைக்கணுறு மாறே

திணிபொலி கரக்குணிலி னலார்
சிறுபறை முழக்கியருள் வாயே
சிகரிபொ லிபத்திரகல் யாணு
சிறுபறை முழக்கியருள் வாயே (அகூ)

*1. இலக்குமணன் ஆகிய மேன்மையாளன். 2. இலட்சியம். 3. திருவடியினின்று உதிர்ந்த பொடியின்மேல்.*

தனன தத்ததன தன்ன தத்ததன தனன தத்ததன தனதனு.

புவியி டத்தின்மனை மகவு சுற்றமிவர்
புகலு மற்பமொழி யதனிலே
புதுமை மிக்கவதி சயவெ ழுச்சிகொடு
புளக முற்றபவ மகலவே

துவித மத்துவித மெனவு ரைக்குமிரு
சுருதி யுற்றபொரு ணிலைமைதோய்
சுகவி ளக்கமடி முடிப குத்தறிவு
தொடவ மைத்திடுமெய் தெரியவே

நவில லுற்றதெனு நிலைபி டித்துலக
நடலை பற்றுபுலை மனமதே
நரலை யுற்ற நதி யெனவு னற்சகுண
நடுவி னிற்குணவ நுபவமே

செவிவ ழிக்குலவி யமுதி லுட்குளிர்தல்
செயமு ழக்குசிறு பறையையே
செழிய பத்திரவ சலமி சைத்தளிகொள்
செயமு ழக்குசிறு பறையையே. (கூ0)

*இப்பாடலில் இராமனது சிறுபறை முழக்கால் அடியர்க்கு நிகழும் சில அநுபவங்கள் கூறப்படுகின்றன.*

கூ-வது சிறுபறைப் பருவம் முற்றிற்று.

---

## 10-வது சிறுதேர்ப் பருவம்.

[1]தருமிதி னுற்றசுரர் மருவார்ம லர்த்தொகுதி
சரமாரி யிற்பெய்தருளார்
சயராம மிக்கவதி சய[2]பூம வற்புதமெய்
தழைகோம ளத்த வெனவே

மருவிதி யெற்குனது திரு[3]வாரி சப்பொனடி
மலர்மீதி லுற்றபணிலம்
வதிவான சக்கரமெய் தியரேகை தற்பரதன்
மணி[4]மோலி யிற்சிரசிலே

கருவிதி யுற்றுலைய வருபீதி வற்றவருள்
கமழ்பாது கைத்தகையினிற்
கனமேவி டற்கெனுமன் மகண்மாத வப்பெருமை
கனிவாய்வெ ளிப்படுதல்போல்

திருவீதி யிற்பெரிய வரையான பத்திரவொர்
சிறுதேரு ருட்டியருளே
[5]தெருண்மாத வத்தருண ரருண்[5]மேனி பெற்றவிறை
சிறுதேரு ருட்டியருளே, (கூக)

*1. கற்பகக்சோலையில் வாழ் தேவர்கள். 2, பெருஞ் செல்வ. 3. தாமரைப்பாதம். 4. கிரீடம். 5. ஞான மடைந்த தவசிகள் தியானிக்கும் அருளுருவம்.*

படிகொண்ட மானிடரின் வடிவங்கு லாவியிசை
பலகொண்டு சூரியன்வழிப்
பார்வந்த மன்னவரு ளேர்கொண்டு ளானெனப்
பார்த்தவர்கள் யாருமுணர
வடிகொண்ட தாஞ்சுவடு கொண்டுணர்த் திடுநிலைமை
யா மு[2]லகு ளோரிசைக்கு
மானவரு முன்புமணி யோசைவரு மென்றதை
யகத்தினினை வூட்டவமைமன்
முடிகொண்ட வர்க்கெலா முலகமுழு தாளுமணி
முடிமொண்ட போகமுய்த்து
முடிவான காலண்ட முடிவான ஞானபர
முத்தியிற் கூடும் வண்[2]ணம்
செடிகொண்ட பத்திரநன் முடிகொண்ட புத்திரா
சிறுதேரு ருட்டியருளே
தெருண்மாத வத்தருண ரருண்மேனி பெற்றவிறை
சிறுதேரு ருட்டியருளே. (கூஉ)

*1. இராமன் மண்மீது திருவடி வைத்து நடக்கும் போது திருவடிச் சுவட்டில் பதிந்துள்ள சங்குசக்கர ரேகைகள் இவன் திருமாலே; மனித வடிவாக வந்துளான் என்பதை உணர்த்தும் என்றவாறு. 2. அவனது திரு வடிபட்ட இடத்து மண்ணைத் தலைமேல் அணிபவர்கள் அத்தலைமேல் மணிமுடி தரித்தரசாளும் செல்வத்தை யிம்மையிற் பெற்று இறுதியில் வீடுபேறும் உறுவர் என்றவாறு.*

அணிமிக்க கிட்கிந்தை நகரத்தை வாலியினை
[1]ரநுசரா கிச்சிறந்த
அன்புற்ற சுக்கிரீ வன்பெற்று [2]ளாக்கினைய
தானசக் கரமுருட்[2]டப்
பணிமிக்க ராவணன் றுனுளி லங்கையம்
பதியினைப் பத்திஞானம்
பல்கியவி பீடனன் றனதறக் கருணையின்
பண்புபொலி யாட்சியாற்றி
மணிமிக்க சக்கர முருட்டிடத் தன்கணீர்
மார்பின்மிசை யேயுருட்டி
வதிபரத னியுருட் டிடவாழி யாக்கினை
வழங்கிமகிழ் தன்மைகாட்டத்
திணிமிக்க பத்திர கிரித்தலைவ னேயுனது
சிறுதேரு ருட்டியருளே
தெருண்மாத வத்தருண ரருண்மேனி பெற்றவிறை
சிறுதேரு ருட்டியருளே, (௯௩)

*1. தம்பி. 2. ஆணையாகிய சக்கிரத்தை நடத்த இப்பாட்டு இராமனது கருணையால் வாலி கிட்கிந்தைக்கும் விபீடனன் இலங்கைக்கும் பரதன் கோசல நாட்டுக்கும் அரசான செய்தியைக் குறிக்கின்றது.*

மலையான வுடல்பெற்ற[1] நிருதருட னுய்நரி
மகிழ்ந்துமே லூர்ந்துருட்ட
[2]வடித்தவர் கரத்திற் பிடித்தபடை முழு[3]துதிர
வாரிதி மிகுந்துருட்ட
அலையான வவர்[4]பரிசை கைக்கொண்டு பேய்ச்சிறு
ராடலாய் மிகவுருட்ட
வணியிராக் கதமகளிர் கொங்கைமிசை முத்துமுத்
தாய்க்கணீ ரழுதுருட்டத்

தலையான பத்துறு மிராவணன் மருட்சியாய்த்
[5]தன்கண்கொண் மணியுருட்டத்
தரைப்பள்ளி யார்புய வரைப்பள்ளி மண்டோ
தரிக்குளா குலமுருட்டச்
சிலையான வம்புருட் டும்பத்தி ராசலா
சிறுதேரு ருட்டியருளே
தெருண்மாத வத்தருண ருண்மேனி பெற்றவிறை
சிறுதேரு ருட்டியருளே. (கூச)

1. அரக்கர், 2; கூர்மையாக்கி. 3. ரத்தக்கடல்.
4. கேடயம். 5. திருதிருவென்று விழிக்க.

நீருருட் டிய[1]தெழிப் பார்[2]முரி தரங்கத்தி
னிரை[3]கடற் கலையுடுத்த
நிலமகண் மணித்திலக முகமான வெண்டிசையு
நேர்பாத லத்துமிசையார்
காருருட் டியவொலிப் பொன்னுலக மீதினுங்
கடிதுசென் றிடுதிறத்தால்
காரணத் தசரதப் பேர்பெற்ற மன்னவன்
காதலியெ னப் பொருந்தி
யேருருட் டியகேக யன்புரி தவத்திலு
லின்பமெய்ப் புதல்வியாகி
யிகலச்செ னத்தனது பைந்தொடிக் கைம்மலரி
னைப்பிணைத் தொப்பிலாமாத்
தேருருட் டினள்புதல்வ பத்திரகி ரிக்கிறைவ
சிறுதேரு ருட்டியருளே
தெருண்மாத வத்தருண ருண்மேனி பெற்றவிறை
சிறுதேரு ருட்டியருளே. (கூரு)

1. ஓசை. 2. வளைந்த அலைகள். 3. கடலாகிய சேலை
இப்பாட்டில் தசரதன் என்ற பெயருக்குக் காரணமும், இராமனைக் கைகேயின் புதல்வன் என்று பாராட்டியுள்ளமையும் காண்க.

**வேறு**

வம்பன் றலைபத் துடையவன்றான்
மாளக் களத்துக் கொய்துதிற
மதித்துப் போற்றிப் பல்லாண்டு
வழுத்துந் தேவர் தமைநோக்கி

[1]நம்பன் பெருந்தே ரிராமனுக்கு
, நனியுய்த் திடுகென் றலுங்கேட்டு
[2]நாக வேந்தன் [3]மாதலிபால்
நவிலச் சென்று போற்றிசெய

விம்பர் மகிழக் கருடனணைந்
திகலார் [4]துவச மென்றாட
விப்போர் செய்வா ரொப்போர்யா
மென்றுங் கண்ட தில்லையென

வும்பர் மகிழு மபிராமா வுருட்டி
யருளாய் சிறுதேரே
[5]யுரவா பத்திரா சலனே
யுருட்டி யருளாய் சிறுதேரே. (கூசு)

*1. விரும்பத்தக்கவன். 2. தேவேந்திரன். 3. தேவேந்திரனுடைய தேர்ப்பாகன். 4. கொடி. 5. அறிவாளன், வலிமையாளன்.*

இருளுந் தியபா தகவுடல்பெற்
றிமையோர் தமக்கு முனிவர்க்கும்
[1]இன்னல் புரிந்து மகிழ்துட்ட
ரினங்கட மைநிக் கிரகித்துத்

தெருளுந் தியமா தவருடனே
சேர்ந்து களிப்புற் றடைக்கலமாஞ்
செயவீ டணன்சுக் கிரீவன்முதற்
சிட்டர்ப் பரிபா லனம்புரிந்தே

அருளுந் தநுமான் குகன்முதலோர்க்
கார்வம் பெருக்கிப் பதினலா
மாண்டிற் பரதன் மகிழநக
ராட்சி புரிவே னென்றிசைத்திட்

டுருளுந் தடந்தே ரூரிறைவா
யுருட்டி யருளாய் சிறுதேரே
யுரவா பத்தி ராசலனே
யுருட்டி யருளாய் சிறுதேரே (கஎ)

*1. துன்பம்.*

தனதான தத்த தனதான தத்த தனதானதத்ததனன

வினையார்தி ரட்சி பெறுமாய முற்ற
விரிவா[1]ரு டற்பை யிடைதோய்
வியனவிபெற்ற நிலைதேர்த லற்று
[2]விதாகு லக்க டலுளே

மனைமாதர் மக்க ளணிநீடு கற்ற
வகையோர்க ளச்[3]ச தமென
மதிமீது பற்று துணிவோ[4]ட ளற்றுண்
மருவோரி பத்தி[4] லவமே

[5]யினைவேனு ளத்தின் மி[5]சைமேவி நித்த
மிதுவாமெ னச்சொல் பவெலா
மியல்பாமு ணர்ச்சி யலவேறெ னப்பு
லினமேன டத்து மதிலார்

[6]சினைமேக மொக்கும் வடிவாள வொப்பில்
சிறுதேரு ருட்டி யருளே
செகமேய பத்தி ர[7]த ராத ரத்த
சிறுதேரு ருட்டி யருளே. (கஅ)

*1. கருப்பாசயம். 2. பலவிதமான கவலை. 3. நிலையென்று. 4. சேற்றுட் சிக்கிய யானை போல. 5. வருந்துகின்ற என் மனதில். 6. கருமுகில் ஒத்த. 7. மலை.*

தான தத்ததன தான தத்ததன தான தத்ததனனு

தார ணித்தலையின் மானி டப்பிறவி
சார்த லுற்றநலமே
தாள்ம தித்துளுண ராது[1]புட்களினு
தார ணத்திலவமே

கோர ணிக்கண்முழு காம லுற்றபல
கோயில் பெற்றதனிலே
கூட வற்புதவி நோத மிக்கவநு
கூல மொக்கவமையா

நார ணித்தவர்செய் தேரெய் தொப்பிறிரு
நாளி யற்றியதனு
நார்வ டப்பணியி னுலெ வர்க்குமியன்
ஞான மிட்டருளவே

சேர ணிக்கையபி ராம சித்தசிறு
தேரு ருட்டியருளே
சீல பத்திரத ராத ரத்தசிறு
தேரு ருட்டியருளே (கூகூ)

*1. பறவைகளைப்போல.*

தனத்த தனனு தனத்த தனனு தனத்த தனனு தனதானு

[1]கனத்தை நிகர்மா மணிக்க [1]திரொடே
கமழ்ச்சி மிகையாம் வடிவா[2]மோ
கனச்சு பகரா வெனக்கை தொழுதே
கருத்தி னிடையோர் கணமாரு

வினத்த வடியார் குறிப்பின் வழிபா
டியற்றி யருமா மறைமீதே
யிசைக்கு முனதோர் புகழ்ச்சி வகையே
யிசைத்து நிலமே லவரானேர்

மனத்தி னிடைதோய் விருப்பெ வையுமே
மகிழ்ச்சி பெருமா றிடலோடே
மகத்து வமெய்வீ டளிக்க வருள்வான்
மதித்தென் விழிநேர் வரல்போலே

யுனத்த வினையா லுவப்பொ டினிதே
யுருட்டி யருளாய் சிறுதேரே
யுளத்தி லிசைநே யபத்ர கிரியா
யுருட்டி யருளாய் சிறுதேரே (ள)

1. மேகத்தை யொத்த நீலவொளியுடன்.
2. மனமகிழ்ச்சியின்பம் செய்பவனே.

கம-வது சிறுதேர் பருவம் முற்றிற்று.

---

## நூற் பயன்

தத்தன தனதானந் தய்யத் தனன

கைத்தியா கமதூறுஞ் செல்வப் பொலிவார்
கற்றமே லவர்நாடுங் கல்வித் திறமோ
[1]டத்தியா மெனநீடன் புள்ளத் திடைதோ
யற்புதா கரஞானங் கொள்ளத் தருமே

சித்திமா தவர்நாளும் [2]பல்கித் தயைகூர்
சிற்பரா வெனவாய்விண் டுள்கிக் கனிவார்
பத்தியார் நிலைகூடுந் தெய்வத் தகைசால்
பத்திரா சலராமன் பிள்ளைத் தமிழே

பத்திராசலம் இராமச்சந்திரன் பிள்ளைத்தமிழ்
முற்றிற்று.



## இந்நூலாசிரியர் இயற்றிய வேறு நூல்கள்.

| | | | | |
|---|---|---|---|---|
| பக்த மான்மியம் | .... | 7 | 0 | 0 |
| சங்கராச்சாரியார் வரலாறு | .... | 1 | 8 | 0 |
| அன்னூர்த்தலபுராணம் | .... | 1 | 8 | 0 |
| கோயிற்பாளையத்தலபுராணம் | .... | 1 | 0 | 0 |
| வண்ணத்திரட்டு | .... | 0 | 12 | 0 |
| இராமானந்த சுவாமிகள் பிள்ளைத் தமிழ் | ... | 0 | 8 | 0 |
| சிரவை, முருகன் பிள்ளைத்தமிழ் | ... | 0 | 8 | 0 |
| பேரூர், பச்சைநாயகி பிள்ளைத்தமிழ் | ... | 0 | 8 | 0 |
| பேரூர், சாந்தலிங்கசுவாமிகள் பிள்ளைத்தமிழ் | .... | 0 | 8 | |
| பேரூர், பிரபந்தத்திரட்டு | .... | 0 | 8 | 0 |
| காரைமடைப் பிரபந்தத்திரட்டு | .... | 0 | 8 | 0 |
| குருந்தமலைப் பதிற்றுப்பத்து | .... | 0 | 8 | 0 |
| மருதமலைப் பிரபந்தத்திரட்டு | .... | 0 | 8 | 0 |
| வெள்ளியங்கிரிப் பிரபந்தத்திரட்டு | .... | 0 | 8 | 0 |
| இரத்தினசலப் பிரபந்தத்திரட்டு | .... | 0 | 8 | 0 |

குருந்தமலை, முருகன்பிள்ளைத்தமிழ். அச்சில்.

## வெளிவராத நூல்கள்.

காரைமடைத் தலபுராணம்

பேரூர்க்கோவை

பேரூர்க்கலம்பகம்

சிறு நூல்கள் பல

இந்நூலாசிரியர் இயற்றிய நூல்கள் கிடைக்கும் இடங்கள் :-

செயலாளர்,

கௌமாரமடாலயம்,

சின்னவாடம்பட்டி P. O.

கணபதி (வழி) கோவை.

செயலாளர்,

சாந்தலிங்க அடிகளார் தமிழ்க்கல்லூரி,

பேரூர் P. O. கோவை.

வேளாள அச்சுக்கூடம், கோவை.